மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—9 15176






உரையாசிரியர்:
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

# மொழிக்கு மொழி இத்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## (சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளான தேவாரத் திருப்பதிகங்களை பொழிப்புரை, விசேடவுரை, பதிக வரலாறு, தலவரலாறு, புராணவரலாறு முதலிய உரை விசேடங்களுடன் 108 தமிழ் மாலைகளாகப் பிரசுரித்துச் சிவபெருமானின் 108 திருநாமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தமிழ் மாலையாகச் சமர்ப்பிக்கும் இந்த திட்டத்தில் இத்துடன் ஒன்பது தமிழ் மாலைகள் வெளிவந்துள்ளன. விலை விவரம்:

| | | |
|---|---|---|
| முதல் ஆறு மாலைகள் ஒவ்வொன்றும் | ... | 2-00 |
| ஆறு தமிழ்மாலைகளும் சேர்த்து | ... | 10-00 |
| 7-வது தமிழ் மாலை முதல் | | |
| ஒவ்வொரு தமிழ் மாலையும் | ... | 3-00 |
| ஒவ்வொரு ஆறு தமிழ் மாலைகளும் | ... | 15-00 |
| 1 முதல் 108 தமிழ் மாலைகளுக்கும் | | |
| முன்பண உதவிச் சலுகை விலை | ... | 158-00 |

சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். ஒரு ஆண்டுக்குள் தவணைகளாகவும் செலுத்தலாம்.

முன்பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு மற்றவை பிரசுரமானதும் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

உரையாசிரியர்—பதிப்பாசிரியர்
**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு
மேலமாம்பலம், சென்னை—600033.

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச்
செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை—9

உரையாசிரியர் :

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி,
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)



வெளியீடு : 20—3—1981
பங்குனி உத்தரத் திருநாள்

பிரசுரம் :

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

 1981 [விலை ரூ. 3-00

# திருஞானசம்பந்தர்



மறைவளர் திரு, வைதிகநிலை, வளர்ஞானப்
பொறையணி முகில், புகலியர் புகல்,
பொருபொன்னித் துறைபெறு மணி,
சுருதியின் ஒளி
திருஞானசம்பந்தர்

5-2 '5176



## ஸமர்ப்பணம்

## ஓம் நீலலோஹிதாய நம:

சிவபிரானுடைய 108 திருநாமங்களில் ஒன்பதாவது திருநாமம் நீலலோஹிதன் என்பதாம். கழுத்தில் நீல வர்ண மும் மற்ற அவயவங்களில் சிவப்புமான நிறமும் உடையவர், அர்த்தநாரீச்வரர், ப்ரக்ருதி-புருஷ ஸமஷ்டி என்றெல்லாம் இப்பெயருக்குப் பொருள் கூறப்படுகிறது. ஸ்ரீருத்ரம் என்ற வேத மந்திரத்திலும் நீலலோஹிதன் என்ற பெயர் வருகிறது. பாதி உடல் கருப்பாயும், பாதி உடல் சிவப் பாயும் இருப்பவர் அதாவது அம்மையப்பனாய் இருப்பவர் என்பது பொருள். கழுத்தில் கருப்பு நிறம் ஏற்பட்டது விட முண்டதனால் என்பதை அனைவரும் அறிவர். விடமுண்ட கருணைச் செயலையும், அர்த்தநாரீச்வரனாய் உயிர்கட்கு அம்மையப்பனும் தன்மையினையும் திருஞானசம்பந்தர் பாடிய பாடல்களை இந்தத் தமிழ்மாலையில் காணலாம். இந்த ஒன்பதாவது ஞானத் தமிழ் மாலையினை ஒன்பதாவது திரு நாமமான **ஓம் நீலலோஹிதாய நம:** என்ற மந்திரத்தினால் அருச்சித்து சிவபெருமானுக்கு இந்த பங்குனி உத்தரத் திரு நாளில் அணிவிக்கும் நற்பேறு பெறுகின்றேன்.

— ஆங்கீரஸ வேங்கடேச சர்மா

---

## பொருளடக்கம்

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

மன்னிய மோகச் சுவையொளி ஊறோசை நாற்றம்என்றிப்
பன்னிய ஐந்தின் பதங்கடந் தோர்க்கும் தொடர்வரிய
பொன்னியல் பாடகக் கிங்கிணிப் பாதநிழல் புகுவோர்
துன்னிய காவமர் சண்பையர் நாதற்குத் தொண்டர்களே.

திருச்சிற்றம்பலம்

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி—5
(11-ம் திருமுறை)

ஐம்புலச் சேட்டைகளைக் கடந்த யோகியர்க்கும் எட்டு தற்கரிய இறைவனது திருவடி நீழலாகிய முத்தியினைச் சண்பையர் நாதனான திருஞானசம்பந்தப் பெருமானின் தொண்டர்கள் எளிதில் அடைவர் என்பது மேலேயுள்ள நம்பியாண்டார் நம்பிகளின் அருளிச் செயலான திருப்பாடலின் கருத்தாகும். அத்தகைய பெருமையினராகிய திருஞானசம்பந்தரின் தலயாத்திரையைத் தொடர்ந்து இந்த ஒன்பதாவது தமிழ் மாலையில் திருவாழ்கொளிபுத்தூர் திருப்பதிங்கள் இரண்டு, திருக்கடம்பூர்ப் பதிகம் ஒன்று, திருநாரையூர்ப் பதிகங்கள் மூன்று ஆக ஆறு திருப்பதிகங்கள் இடம் பெறுகின்றன.

எட்டாவது தமிழ் மாலையின் பணிவுரையில் 'இந்த ஆண்டு முடிவுக்குள் இன்னும் இரண்டு மாலைகளையாவது இறைவனுக்கு அணிவிக்க வேண்டும்' என்ற உறுதியினை வெளியிட்ட போது ஆங்கில ஆண்டு முடிவினையே உள்ளத்தில் கொண்டிருந்தேன். தற்பொழுது தமிழ் ஆண்டு முடிவுக்குள்ளாவது இந்த ஒன்பதாவது மாலைக்குப் பிறகு பத்தாவது மாலையினை வெளியிடத் திருவருள் துணை நிற்க வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

## பதிகமும் உரையமைப்பும்

சென்ற தமிழ் மாலையில் குறிப்பிட்டபடி பல நேயர்களின் விருப்பத்துக் கிணங்க இந்தத் தமிழ் மாலையில் பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றுக்கும் அதன் கீழேயே உரையினை அமைத்துள்ளேன். பதிக வரலாற்றினை முதலிலேயே கொடுத்துள்ளேன். இந்த முறையினைப் பெரிதும் அன்பர்கள் விரும்பி வரவேற்பர் எனவே நம்புகிறேன்.

## நூல் வெளியீட்டில் தாமதம்

நமது தமிழ்மாலைகள் தற்சமயம் தாமதமாக வெளி வருவது குறித்துப் பல அன்பர்கள் நேரிலும் கடித மூலமும் கவலை தெரிவித்து வருவதிலிருந்து இந்த திருமுறைப் பணியினை எவ்வளவு தூரம் நேசிக்கிறார்கள் என்பதை அறி கின்றேன். மாலைகள் ஒன்றன் பின் ஒன்றாக அதிககால இடை வெளியில்லாது வெளிவரத் தக்க முயற்சிகளை மேற்கொண்டு வருகிறேன். அல்லும் பகலும் அதே சிந்தையாக இருக் கின்றேன். விரைவில் அனைத்தும் சரியாகி நேயர்கள் விருப்பப்படி நூல்கள் இனிது வெளிவரும்.

## நன்றியுரை

அன்னதானமும் ஞானதானமும் ஒருங்கே செய்திடும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ முத்துக் குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகள் நமது தமிழ் மாலை களைப் பார்வையிட்டு ஆசியுரை வழங்கியருளியுள்ளார்கள் மேலும் தக்க சமயத்தில் தக்க உதவி செய்வதாகவும் அருள் செய்திருக்கிறார்கள். அவர்கள் திருவடிகளில் மனம் மொழி மெய்களால் செய்யும் வணக்கத்தையும், நன்றியையும் தவிர ஏழையேன் வேறு யாது செய்ய வல்லேன்?

அதிவர்ணாச்ரம, ஆசார்யவர்ய, சைவ சமய பரிபாலக, சிவாக்கிர யோகீந்த்ர மஹாஞான சிவாசாரிய சுவாமிகள் எனச் சைவத் தமிழ்கூறும் நல்லுலகம் சிறக்கப் பாராட்டும்

பெருமையுடைய ஸ்ரீ சிவாக்கிர யோகிகளால் ஸ்தாபிக்கப் பட்ட சூரியனூர்கோயில் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந்நிதானம் அவர்களும் நம் தமிழ் மாலைகளைப் பார்வையிட்டுப் பாராட்டுரை வழங்கியுள்ளார்கள். அவர்கட்கும் அடியேனது வணக்கங்களையும் நன்றியினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

## முடிவுரை

சிவநேசம் மிக்க செல்வர்கள் நமது தமிழ் மாலையினைப் புத்தகப் பதிப்புத் தொழிலாகக் கொள்ளாமல் திருமுறை ஞான வேள்வியாகக் கொண்டு பேருதவி செய்யும் வண்ணம் இறையருள் தூண்ட வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

சிவம்



திருக்கடம்பூர் கரக்கோயில் கர்ப்பக் கிருஹம்
தேர் வடிவில் சக்கரத்தையும் காணலாம்

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# இப்பதிப்பில் வந்துள்ள தலங்களின் விசேடங்கள்

(சுருக்கம்)

## 1. திருவாழ்கொளிபுத்தூர்

திருவாளப்புத்தூர் என இக்காலம் வழங்கப்படும் இத் தலம் காவிரிக்கு வடகரையில் 29-வது தலமாகும். வாளொளிபுத்தூர் எனவும் வழங்கப்படும். வடமொழியில் அரதனபுரம் என்று வழங்கும். இறைவர் திருமேனியின் ஒளி காரணமாக **மாணிக்கவண்ணர்** என்ற பெயருடன் விளங்கு கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலந்துப் பாடிய திருப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாடலிலும் **''வாழ்கொளி புத்தூர் மாணிக்கத்தை மறந்து என் நினைக்கேனே''** என்று இத்திருப்பெயரை எடுத்தாண்டுள்ளார்கள், இறைவியின் திருப்பெயர் **வண்டமர்பூங்குழலி.** இப்பெயரை திருஞான சம்பந்தர் தமது திருப்பதிகத்தில் (தக்கராகப் பண் கொண்ட பதிகம்) எட்டாவது திருப்பாடலில் **''வண்டமர் பூங்குழல் மங்கையொர் பாகமாயவன்''** என்று பாடி அருளினார்.

திருமால் இந்த மாணிக்க லிங்கத்தை ஸ்தாபித்து பூசித் தார் என்பது தலவரலாறு. அருச்சுனனும், துர்க்கையும் பூசித்த தலம். வாசுகி வழிபட்டதலம். துர்க்கைக்கு இத் தலத்தில் சிறந்த வழிபாடு நடைபெற்று வருகிறது. வாசுகிக்கும் பிரதி வருடமும் அபிஷேகமும் பூசையும் நடை பெறுகிறது.

அருச்சுனனது பூசைக்கு மகிழ்ந்த பெருமான் அவன் வாளைப் புற்றில் ஒளித்து வைத்திருந்து மீட்டும் தனது ஊர் திரும்பியபோது அளித்தருளினார் என்று தலவரலாறு

கூறுகிறது. இதனாலேயே வாள் ஒளி புற்றூர் (வாளை ஒளித்த புற்றினையுடைய ஊர்) என்ற பெயரும் பெற்றது என்பர். இறைவர் திருமேனி ஒளி காரணமாகவும் வாளொளி புத்தூர் எனப் பெயர் பெற்றது எனவும் கூறுவர். (வாள் ஒளி—மிகுதியான ஒளி) வாள் என்ற சொல்லே ஒளி எனப் பொருள்படும். வாளொளிபுத்தூர் வாழ்கொளிபுத்தூர் என மருவியிருக்கலாம்.

தல விருட்சம் வாகை மரம். இதனை வாகை நுண்டுளி **வீசும் வாழ்கொளி புத்தூருளானே** என்ற திருஞானசம்பந்தர் திருவாக்காலும் அறியலாம்.

இத்தலம் மாயூரம் –சிதம்பரம் ரயில் பாதையில் நீடூர் நிலயத்திற்கு வடக்கே 10 கி. மீட்டர் தொலைவில் உள்ளது. பேருந்து வசதிகள் தற்காலம் உள்ளன. வைத்தீசுவரன் கோயில் நிலயத்தினின்றும் நேர் மேற்கில் அதே தொலைவில் உள்ளது. திருஞானசம்பந்தர் திருஓமமாம்புலியூரில் இருந்து இத்தலத்தையடைந்து இங்கிருந்து திருக்கடம்பூர் சென்றனர் என்று பெரிய புராணத்தால் அறியப்படுகிறது.

இத்தலத்திற்கு திருஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டு, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக மூன்று பதிகங்கள் உள்ளன. திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய தலபுராணமும் உள்ளது.

## 2. திருக்கடம்பூர்

கடம்பைக் கரக்கோயில் என்று திருநாவுக்கரசு சுவாமிகளால் போற்றப்பட்ட இத்தலம் காவிரிக்கு வடகரை 34-வது தலம் ஆகும். மேலைக் கடம்பூர் எனவும் வழங்கப் படும். ஊரின் பெயர் கடம்பூர் என்றும் கோயிலின் பெயர் கரக்கோயில் என்றும் கூறப்படுகிறது. கரக்கோயில் என்ற இப்பெயர்க்குரிய சரியான காரணம் புலப்படவில்லை. இது பற்றி கோவை சிவக்கவிமணி திரு C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தமது பெரிய புராணப் பேருரையில்

பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள். (திருத்தொண்டர் புராணம் திரு C. K. S. உரை 4-ம் பகுதி பக்கம் 287).

"இத்தலத்தை வணங்கிய இந்திரன் இதனைத் தன்னுல கத்திற்குக் கொண்டு போக நினைத்துப் பாதாளம் வரை தோண்டியும், அஃது, அப்பாலும் ஊடுருவிப் போவது கண்டு அஞ்சி முன்போல் அமைத்துப் பூசித்து அமிர்தம் உண்டாகும்படி வரப்பெற்றனன் என்ற வரலாறு கருதி கரக்கோயில் எனப்படும் என்பர்.

கடம்பூர் தன்னிலிடம் பெற இருந்தும் என்று திருவாச கத்துட் போற்றப்பட்டதுமிக்கருத்து என்ப" கரக்கோயில் என்ற பெயருடன் இவ்வரலாற்றின் பொருத்தம் ஆராய்ச்சிக்குரியது.

இறைவர் திருப்பெயர் அமிர்தகடேசர். இறைவியார் திருநாமம் சோதிமின்னம்மை என்பதாம்.

இது சிதம்பரம் தாலுக்கா காட்டுமன்னார்கோயிலுக்கு மேற்கே 5 கி. மீட்டர் தொலைவில் உள்ளது. திருஞானசம் பந்தர் திருஓமமாம்புலியூரிலிருந்து திருவாழ்கொளிபுத்தூர் அடைந்து அங்கு நின்றும் இத்தலத்துக்கு எழுந்தருளினர் என்பது பெரிய புராணம். திருஓமமாம்புலியூரிலிருந்து இத் தலம் வடமேற்கே 7 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

கோயில் கர்ப்ப கிருஹத்தின் அடிப்பாகம் தேர் வடிவில் குதிரைகள் பூட்டிய நிலையில் உள்ளது. (இதனைப்படத்திலும் காணலாம்). இக்கடம்பூர்க்கு கிழக்கே சுமார் 2 கி. மீட்டர் தூரத்தில் கடம்பூர் இளங்கோயில் என்ற வைப்புத் தலம் முற்றிலும் இடிந்த நிலையில் உள்ளது.

இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் இரண்டு ஆக மூன்று பதிகங்கள் உள்ளன.

# 3. திருநாரையூர்

காவிரி வடகரைத் தலங்களில் 33-வது தலமாகிய திருநாரையூர் நாரை பூசித்துப் பேறு பெற்றமையால் இப்பெயர் பெற்றது. திருத்தொண்டர் திருவந்தாதி பாடியும் தேவாரத் திருமுறைகளைத் தொகுத்தும் சைவவுலகுக்குப் பேருபகாரம் செய்த நம்பியாண்டார் நம்பி என்ற ஆதி சைவ மறையவர் அவதரித்துப் புகழ் பெற்ற தலம். நம்பியாண்டார் நம்பிகள் இத்தலத்துப் பொல்லாப் பிள்ளையார் திருவருள் பெற்றே திருமுறைகளைக் கண்டெடுக்கும் ஆற்றல் பெற்றார். சுயம்பு மூர்த்தியாதலின் பொள்ளாப் பிள்ளையார் என்ற பெயர் பொல்லாப் பிள்ளையார் என வழங்கலாயிற்று. திருமுறைகண்ட வரலாறு தக்க சமயத்தில் தனியாக வெளியிடப்படவுள்ளதால் இங்குக் கூறவில்லை.

திருமுறைகளை வகுக்கும்படி சொன்ன அபயகுல ராச ராச சோழனுக்கும், வகுத்தருளிய நம்பியாண்டார் நம்பிகட்கும் விக்கிரகங்கள் உள்ளன.

சிதம்பரத்திலிருந்து காட்டுமன்னார்கோயிலுக்குச் செல்லும் பெருவழியில் சுமார் 18 கி. மீ. தூரத்தில் உள்ளது இத்தலம். பேருந்து வசதிகள் உள்ளன. திருஓமமாம்புலியூரிலிருந்து திருக்கடம்பூர்வழியாகவும் இதனை அடையலாம். திருஞானசம்பந்தர் இத்தலத்தையடைந்தது இவ்வழியிலேயாம்.

இறைவர் சௌந்தரேசுவரர் என்னும் திருநாமத்துடனும், இறைவி திரிபுரசுந்தரி என்ற திருநாமத்துடனும் இங்கு எழுந்தருளியுள்ளனர்.

இத்தலத்துக்கு திருஞானசம்பந்தர் பதிகங்கள் மூன்றும் திருநாவுக்கரசர் பதிகம் இரண்டும் ஆக ஐந்து திருப்பதிகங்கள் உள்ளன.

சிவம்



திருப்பனந்தாள் காசிமடம் அதிபர் காசிவாசி

ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

சிவசிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் காசிவாசி

# ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

## பேரன்புடன் வழங்கியருளிய

# ஆசியுரை

திருப்பனந்தாள்—612504
(தஞ்சை ஜில்லா)
தேதி 24-12-1980

திரு ஆங்கிரஸ எஸ். வேங்கடேச சர்மா அவர்கள் ஒரு புது அணுகு முறையில் சைவத் தொண்டு செய்து வருகின்றார்கள்.

தேவாரங்கள் பண்முறையில் வரிசைப்படுத்தப் பெறுகின்றன, தலமுறையிலும் வரிசைப்படுத்துவதுண்டு. மூவர் முதலிகளின் வரலாற்றைப் பெரியபுராணததின் துணை கொண்டு ஆய்ந்து தலயாத்திரை முறையில் வரிசை செய்து பொழிப்புரை விளக்கவுரைகளும் தந்து கற்பார் மன நெகிழ்ந்து பக்தி மார்க்கத்தின் பயனுணரச் செய்யும் இந்த அணுகு முறை மிகவும் சிறப்பான பயன் தர வல்லதாகும். அத்துடன் தலக் குறிப்புக்கள் நாயன்மார் வரலாறுகள் ஆகிய அனைத்து அம்சங்களையும் சிறப்புற எழுதி வெளியிடுதலும் பாராட்டுதலுக்குரியதாகும்.

மரபுநிலை மாட்சியவாகிய மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை என்னும் இத்தொடர் வெளியீடு சைவ நன்னெறிச் சாரும் அன்பர்கள் யாவரும் தொடர்ந்து பெற்றுக் கற்றுப் பாதுகாக்கத் தக்கனவாகும்,

திரு சர்மா அவர்கள் இப்பணியை முழுதும் செய்யவும், நலமும் வளமும் பெறவும் செந்திலாண்டவன் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம். சுபம், —சிவ சிவ

சிவமயம்

சூரியனார்கோயில் ஸ்ரீ சிவாக்கிரயோகிகள்
ஆதீனம் குருமகாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி பரமாசாரிய சுவாமிகள்

அவர்கள் பேரன்புடன் வழங்கியருளிய

# ஆசியுரை

தேதி: 24-1-81

பிரம்மஸ்ரீ சர்மா அவர்களுக்கு ஸ்ரீ ஞானப்பூங்கோதை ஸமேத ஸ்ரீ காளத்தீச்வரர் திருவருள் எஞ்ஞான்றும் துணை புரிகுவதாக.

தாங்கள் மொழிக்கு மொழி தித்திக்கும் "மூவர் தமிழை" மாலையாக்கி அனுப்பிய எட்டும் பெற்று மிக்க மகிழ்ந்தனம். சைவத் தமிழ் உலகம் தங்களின் இம் முயற்சிக்கு பாராட்டும் கடப்பாடு உடையது. நமது பாராட்டுக்கும் உரியது.

இத்தெய்வத் தீந்தமிழ் அருட்பணி சிறக்க, தொடர்ந்து நடைபெறத் தங்களுக்கு நீண்ட ஆயுளும் எல்லா வளமும் அருள வேண்டி ஸ்ரீமத் ஆசாரியவர்ய, அதிவர்ணாச்ரம, சைவ பரிபாலக ஸ்ரீ குரு சிவாக்கிரயோகீந்த்ர மஹாஞான சிவாசாரிய மூர்த்திகள் திருவடிகளைப் பிரார்த்திக்கின்றனம்.

இங்ஙனம்

(ஒப்பம்) ஆதீனகர்த்தர்

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை—9

## திருஞானசம்பந்தர் அருளியவை

(தொடர்ச்சி)

## திருவாழ்கொளிபுத்தூர்—1

**பதிக வரலாறு:** திருஓமமாம்புலியூர் உடையவர் வடதளிக்கோவிலில் இறைவரைப் பணிந்து பதிகம் பாடி வணங்கிய பின்னர், திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதில் சூழ்ந்த அழகிய ஊராகிய திருவாழ்கொளிபுத்தூர் வந்தடைந்தனர். அங்குச் சிறப்பு மிக்க கோவிலினுட்சென்று வலங்கொண்டு அணைந்து கருங்குவளை மலர் போன்ற அழகிய கருநிறம் வாய்ந்த கண்டத்தினையுடைய இறைவரது திருமுன்பு பணிந்து உலகம் புகழும் திருப்பதிகங்களைப் பாடினார். அவற்றில் தற்பொழுது கிடைத்துள்ள இரண்டு பதிகங்களில் பொடியுடை மார்பினர் எனத்தொடங்கும் பதிகம் ஒன்றாகும்,

இத்திருப்பதிகம் அடியிணைதந்த அருள் என்ற தலைப்பில் அகத்தியர் தேவாரத்திரட்டில் தொகுக்கப் பெற்ற சிறப்பினை உடையது. "பொடியுடை அரவணை அந்தணாளன் அடியிணை தந்த அருளே ஆகும்" என்னும் வழக்குப்படி, பொடியுடை எனத்தொடங்கும் இப்பதிகத்துடனே "அரவணையான் சிந்தித்து அரற்றும் அடி" எனத் தொடங்கும் அப்பரடிகளின் திருவடித்தாண்டகமும், சுந்தரர் பெருமானின் "அந்தணாளன்" எனத் தொடங்கும் திருப்புன்கூர்த் திருப்பதிகமும் இத்தலைப்பிலுள்ளன. இப்பதிகத்தின் பாடல்தோறும் அடி காண்போம், அடிசேர்வோம், அடி சார்வோம் என்று பிள்ளை யார் அருளிச்செய்திருத்தலின் இது திருவடிகளைப் போற்றிய பதிகமாதல் கண்டு கொள்க.

உமையொரு பாகனாய், நீலமிடற்றினனாய், பிட்சாடன மூர்த்தியாய், பிரம்மகபாலத்தில் பலியேந்தும்கோலத்தினனாய், கருத்தனாய்க் கள்வனாய், மாலயனறியா விகிர்தனாய், தொண்டர்கட்கு எளிதில் வெளிப்பட்டு அருள் செய்யும் அண்ணலாய்ப் பாடிய பெருமையால் இப்பதிகத்தினைப் பார் புகழ் பதிகம் என்று சேக்கிழார் பெருமான் போற்றினர் போலும்.

பண்—தக்கராகம்] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பொடியுடைமார்பினர் போர்விடையேறிப்
பூதகணம் புடைசூழக்
கொடியுடையூர்திரிந் தையங்
கொண்டு பலபலகூறி
வடிவுடைவாள்நெடுங் கண்ணுமைபாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்க்
கடிகமழ் மாமலரிட்டுக்
கறைமிடற்றானடி காண்போம். —1

பதிகப் பொழிப்புரை:

1. திருநீற்றைப் பூசிய மார்பினை உடையவராய், போர்த் தொழிலையுடைய எருதினை ஊர்ந்து பூதகணங்கள் பக்கங்களில் சூழ்ந்து வர, கொடிகளையுடைய ஊர்கள் தோறும் திரிந்து பிச்சையேற்றுப் பற்பல வார்த்தைகள் சொல்லி, அழகிய ஒளிபொருந்திய நீண்ட திருக்கண்களை யுடைய உமாதேவியாரைப் பாகமாகக் கொண்டவராகிய நீலகண்டப்பெருமானது திருவடிகளைத் திருவாழ்கொளி புத்தூர் என்னும் தலத்தில் சென்று வாசனை வீசுகின்ற சிறந்த மலர்களைக்கொண்டு அருச்சித்துக் காண்போம்.

இத்திருப்பாடல் ஊர்பலி கொண்டு உமையொரு பாகனுய் எழுந்தருளியிருக்கும் நீலகண்டப்பெருமானது திரு வடிகளைத் திருவாழ்கொளிபுத்தூர் சென்று மலர் தூவிக் காண்போம் என்று கூறியதாகும்.

வாகனத்திலேறி பலர்புடைசூழப் பிச்சை ஏற்கச் செல் லும் பெருமையினுல், பிச்சை கொள்ளினும் அவரே தலைவர் என்று கூறியவாறும். ஊர்திரிந்து ஐயமேற்றல் அடியார்க்கருளும் பெற்றியே எனக் கொள்க.

மலரிடுதல் — மலர்களால் அருச்சித்தல்.

காண்போம் — தரிசிப்போம் என்ற வடமொழிச் சொல் லின் பொருளைக் கொண்டது.

அரைகெழுகோவண ஆடையின்மேலோர்
ஆடரவம்மசைத் தையம்
புரைகெழுவெண்டலை யேந்திப்
போர்விடை யேறிப்புகழ
வரைகெழுமங்கைய தாகமொர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்
விரைகமழ் மாமலர்தூவி
விரிசடையானடி சேர்வோம், ...2

2. அரையிற்கட்டிய கோவண உடையின் மேல் ஒப்பற்ற ஒரு ஆடுகின்ற பாம்பைக் கச்சாகக் கட்டித் தசை கழிந்த ஒரு வெண்தலையில் பிச்சையெடுத்துப், போர் செய்யும் இடபத்தின் மீதேறி யாவரும் புகழுமாறு மலை மகளான உமாதேவியாரைத் தமது சரீரத்தின் ஒருபாக மாகக் கொண்டவராகிய விரிந்த சடையினையுடைய சிவ பிரானது திருவடிகளை நறுமணம் கமழும் சிறந்த மலர்களால் அருச்சித்து இடைவிடாது தியானிப்போம்.

சேர்தல் — இடைவிடாது நினைத்தல்; அதாவது தியா னித்தல். இப்பொருள் திருக்குறள் பரிமேலழகர் உரையில் கண்டது. (திருக்குறள்- கடவுள் வாழ்த்து:3)

புரை — ஓட்டை; தசை கழிதலால் தலையின் முன்புறம் பிச்சை ஏற்கும் வண்ணம் குழிவு ஏற்படும். அதனையே புரை கெழு என்றார். எனவே தசைகழிந்த எனப் பொருள் கொள் ளப்பட்டது.

பிச்சையேற்பவராயினும் அவரே தலைவர், அவரையே தியானிப்போம் என்று கூறியவாறு. 'சிவஏகோத்யேய:' (சிவ பெருமான் ஒருவரே தியானித்தற்குரியவர்) என்ற அதர்வ சிகோபநிஷத் வசனமும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியது.

பூண்நெடுநாகம் அசைத்தனலாடிப்
புன்றலையங்கையி லேந்தி
ஊணிடுபிச்சையூர் ஐயம்
உண்டியென்று பலகூறி
வாள்நெடுங்கண்ணுமை மங்கையொர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்த்
தாள்நெடு மாமலரிட்டுத்
தலைவனதாள்நிழல் சார்வோம். ...3

3. அணிகலன்களாக நீண்ட பாம்புகளை அணிந்து கொண்டு, ஓர்கையில் அனலேந்தி ஆடி, இழிந்த தலை

ஓட்டினை அழகிய திருக்கரத்தினிலேந்தி, உணவாக இடுகின்ற பிச்சையே ஊண் எனவும், ஊர்களிலே இடப்படும் ஐயமே தம்முடைய உணவு எனவும் பலவகையாகக்கூறி நீண்ட கண்களையுடைய உமாதேவியாரை ஒரு பாகமாகவுடையவரான திருவாழ்கொளிபுத்தூர் கோயில் கொண்ட சிவபெருமானது திருவடி நீழலை நீண்ட காம்புகளையுடைய சிறந்த மலர்களால் அருச்சித்துச் சார்பாக அடைவோம்.

பிச்சைஏற்பினும் சிவபெருமானே அனைவராலும் பற்றுக்கோடாக அடைதற்குரியவன்.

ஊணிடுபிச்சை — இடுபிச்சை ஊண் என மாற்றிப் பொருள் கொள்க.

ஊணிடு பிச்சை, ஊர் ஐயம் உண்டி என்று பல கூறி என்றது பிச்சையே தமக்கு உணவு என்ற ஒரே செய்தியை பல முறை பலவகையாகச் சொல்லுதலாம்.

ஐயம் என்பது இடுவோர் அழைத்து இடுவதும், பிச்சையென்பது இரவலன் தானுகக் கேட்டுப் பெறுவதுமாம். இக்கருத்தை ஐயம் இட்டு உண் என்பதில் இடுவார் மேலும், பிச்சைபுகினும் கற்கை நன்றே என்பதில் புகுவார் மேலும் ஏற்றிச் சொன்னது காண்க.

தாரிடுகொன்றையொர் வெண்மதிகங்கை
தாழ்சடை மேலவைசூடி
ஊரிடுபிச்சைகொள் செல்வம்
உண்டியென்று பலகூறி
வாரிடுமென்முலை மாதொருபாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்க்
காரிடு மாமலர்தூவிக்
கறைமிடற்றுனடி காண்போம். ...4

4. மாலையாக அமைந்த கொன்றைமலர், ஒப்பற்றதான வெண்பிறை, கங்கையாறு ஆகியவற்றைத் தாழ்ந்து தொங்குகின்ற தமது சடைமேல் தரித்து, ஊராரிடுகின்ற பிச்சையே

தாம் கொள்ளத் தக்க செல்வமும், உணவுமாகும் என்று பல வார்த்தைகளைக்கூறிக் கச்சினை இடுகின்ற மென்மையான கொங்கைகளையுடைய உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண்டவனும், திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளிக் கோயில் கொண்டவனுமான நீலகண்டனது திருவடிகளைக் கார்காலத்து மலரும் கொன்றைப் பூக்களால் அருச்சித்துக் காண்போம்.

ஊராரிடுகின்ற பிச்சையே தமக்குச் செல்வமும் உணவுமாம் எனக் கூறும் இறைவன் ஒரு பெண்ணையும் ஒரு பாகத்தில் கொண்டுள்ளானென நயந்தோன்றப் பாடியவாறு காண்க. இதனாலும் பிச்சையெடுத்தல் என்பது அவருக்கு ஒரு திருவிளையாடலேயாகும் எனத் தெரிவித்தவாறும் கண்டு கொள்க.

**காரிடு மாமலர்**— கார்காலத்து மலரும் பூவாகிய கொன்றை.

**கனமலர்க்கொன்றை அலங்கல்இலங்கக்**
**காதிலொர் வெண்குழையோடு**
**புனமலர்மாலை புனைந்தூர்**
**புகுதியென்றே பலகூறி**
**வனமுலைமாலை மங்கையொர்பாகம்**
**ஆயவன்வாழ்கொளி புத்தூர்**
**இனமல ரேய்ந்தனதாவி**
**எம்பெருமானடி சேர்வோம். ...5**

5. மிகுதியான மலர்களால் தொடுக்கப்பட்ட கொன்றைமாலை மார்பினில் விளங்கத் திருச்செவியில் ஒரு வெண்மை நிறமுடைய சங்கக்குழையோடு, முல்லை நிலத்தில் பூக்கனவாகிய மலர் மாலைகளையுமணிந்து பிச்சையின் பொருட்டு ஊர்கள்தோறும் புகுவாய் என்று பலவிதமாகக் கூறி, அழகிய கொங்கைகளையுடைய மலைமகளாம் உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண்டவனும், திருவாழ்கொளி

புத்தூர் கோயில் கொண்ட எம்பெருமானது திருவடிகளை அருச்சிக்கத்தக்கதான மலர்களைக் கொத்துக் கொத்துகளாகத் தூவி அருச்சித்துச் சேர்வோம்.

கனமலர்— கூட்டம், மிகுதி, செறிவு போன்ற பொருள்கள் கனம் என்ற சொல்லுக்கு உண்மையால் மிகுதியான மலர்கள் எனப் பொருள் உரைக்கப்பட்டது. இனி, கனம் என்ற சொல்லுக்குப் பொன் என்ற பொருளும் உண்டாகையால் பொன் போலும் மலர் எனக் கொள்ளினும் அமையும். கொன்றையின் நிறம் பொன்னிறமாம்.

அலங்கல்—மாலை.

வனமுலை—அழகிய முலை.

ஊர் புகுதி—பிச்சை ஏற்க ஊரினுள் செல்வாய் என்று தமக்குள் கூறிக் கொள்வதாக இறைவர் கூற்றாகவேனும், இறைவனது செயல்களைக்கூறி அருச்சிக்கும் அடியார்கள் கூற்றாகவேனும் கொள்ளலாம். முன் பாடல்களிலும் பல கூறி என்னுமிடத்துப் பொருந்துமிடங்களில் பாடும் அடியார்கள் மேலேற்றிப் பொருள் கொள்ளினும் அமையும்.

இனமலர் தூவுதல்— கூட்டமாக மலர்கள், அதாவது மலர்களை இரு கைகளிலும் நிறைய எடுத்துத் திருவடிகளில் இட்டு அருச்சித்தல். அல்லது இனம் என்பதற்கு வகை எனப்பொருள் கொண்டு ஒவ்வொரு வகையான மலர்களைத் தனித்தனியே எடுத்து அருச்சித்தலுமாம்.

ஏய்ந்தன—பூசைக்குப் பொருந்துவன; பூசையில் உபயோகிக்கத் தகுந்த மலர்கள் என்பதாம்.

புனம்—முல்லை நிலம்; காடும் காடு சார்ந்த இடமும் முல்லை எனப்படும்.

சேர்வோம்— இரண்டாவது திருப்பாடலில் கூறியபடி இடை விடாது தியானிப்போம் எனப் பொருள் படும். அல்லது அடைவோம் அதாவது சரணடைவோம் எனவும் கொள்ளலாம்.

அளைவளர்நாகம் அசைத்தனலாடி
அலர்மிசையந்தணன் உச்சிக்
களைதலை யிற்பலிகொள்ளும்
கருத்தனே கள்வனேயென்று
வளையொலிமுன்கை மடந்தையோர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்த்
தளையவிழ் மாமலர்தூவித்
தலைவனதாளிணை சார்வோம். ...6

6. புற்றில் வளர்கின்ற பாம்பினையணிந்து, தீயின்கண் ஆடிப், பிரமதேவனின் களையப்பட்ட உச்சித் தலையில் பலி கொள்ளும் கருத்தனே! கள்வனே! என்று புகழ்ந்து, வளைகள் ஒலிக்கின்ற முன்னங்கைகளையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்திற் கொண்டவனை, திருவாழ்கொளிபுத்தூர்க் கோயில் கொண்டவனை தலைவனாகிய சிவபிரானது இரண்டு திருவடிகளையும் முறுக்கவிழ்கின்ற சிறந்த மலர்களைக் கொண்டு அருச்சித்துச் சார்வோம்.

அளை—புற்று அலர் மிசை அந்தணன் — திருமாலின் கொப்பூழாகிய தாமரையில் தோன்றிய பிரமதேவன்.

களைதலை—களையப்பட்ட தலை.

தளைஅவிழ்—மொட்டாக இருக்கும் மலர்கள் மொட்டாம் தன்மையினின்றும் நீங்கி இதழ்கள் விரிதலாம்.

சார்வோம் – பற்றுக்கோடாக அடைவோம், சரணாக அடைவோம் என்பதாம்.

அடர்செவிவேழத்தின் ஈருரிபோர்த்து
அழிதலையங்கையி லேந்தி
உடலிடுபிச்சையோ டையம்
உண்டியென்று பலகூறி
மடல்நெடுமாமலர்க் கண்ணியோர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்த்
தடமல ராயினதூவித்
தலைவனதாள்நிழல் சார்வோம். ...7

7. அகன்ற காதுகளையுடைய யானையினது உரித்த தோலைப் போர்த்து, அழிந்த தலையினை அழகிய கரத்தினில் தாங்கி, உடம்புக்கு இடுகின்ற பிச்சையுடன் ஐயமும் உண்டவன் என்று இவ்வாருகப் பல கூறி, இதழ்களையுடைய நீண்ட சிறந்த குவளைமலர் போன்ற கண்களையுடைய உமா தேவியாரை ஒரு பாகத்தில் கொண்டவனை, திருவாழ் கொளிபுத்தூரில் கோயில் கொண்டவனை தலைவனது திருவடி நீழலைத் தடமலர் தூவி அருச்சித்துச் சார்வோமாக.

அடர் செவி—பரந்து அகன்ற காது.

அழிதலை—அழிந்ததலை; பிரமகபாலம் குறித்தது.

ஐயம்—பிச்சை என்பவற்றுக்கு முன் மூன்றும் பாடலிற் குறித்தவாறு பொருள் வேற்றுமை கொள்க.

உடலிடு பிச்சை-உடம்புக்கு இடுகின்ற பிச்சை, உடலால் இடுகின்ற பிச்சை என இரு வழியிலும் விரித்துப் பொருள் கொள்ளலாம். முன்னதற்கு உடல் உயிருடன் சேர்ந்து இருத்தற்காக (அதாவது இறந்து விடாது உயிர் வாழ்தற் காக) இடப்பட்ட பிச்சையென்றும், பின்னதற்கு இறைவனது அழகில் மயங்கித் தாருகவனத்து மகளிர் தமது உடலால் பரவசப்பட்டு இட்ட பிச்சை என்றும் பொருள் கொள்க.

தன்வசமழிந்து தாருகவனத்து மகளிர் உடலாலிட்ட (பரவசமாகிய) பிச்சை என்பது தருமபுர ஆதீன உரைக் குறிப்பு.

உடலிடு— என்பதற்குப் பதில் உடனிடு எனப்பாடங் கொண்டால் காக்க வைக்காது உடனே இட்ட பிச்சை என்று பொருள்படும்.

தடமலர் — அகலமான இதழ்களையுடைய மலர்கள்; அல்லது தடம் என்பதற்கு நீர்நிலை எனப் பொருள் கொண்டால் தாமரை, குவளை முதலிய நீர்ப்பூக்கள் எனப் பொருள் கொள்க.

உயர்வரையொல்க எடுத்தவரக்கன்
ஒளிர்கடகக்கை அடர்த்து
அயலிடுபிச்சையோ டையம்
ஆர்தலையென் றடி போற்றி
வயல்விரிநீல நெடுங்கணிபாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்ச்
சயவிரி மாமலர்தூவித்
தாழ்சடையானடி சார்வோம். 8

8. உயர்ந்த திருக்கயிலாயமலையினை அசையும்படி பெயர்த்தெடுக்க முயற்சித்த இராவணனது ஒளி விடுகின்ற கடகங்கள் அணிந்த கைகளை நெருக்கி (அவனது வலியை அழித்து), அயலவர் இடுகின்ற பிச்சையோடு ஐயமும் உண்பவரே! என்று அடிபோற்றிப்பாடி, வயல்களில் மலர்கின்ற நீலமலர் போன்ற அழகுடைய நீண்ட கண்களையுடைய உமாதேவியாரை ஒரு பாகமாக உடையவனை, திருவாழ் கொளிபுத்தூரில் கோயில்கொண்ட தாழ்சடையானை பெருமானைக் கூட்டமாக மலர்ந்த சிறந்த மலர்களைத் தூவி அருச்சித்துத் திருவடிகளைச் சார்பாக அடைவோம்.

ஒல்க—அசைய; அடர்த்து—நெருக்கி ஆர்தலை—ஆர்தலை யுடையவன் அதாவது உண்பவன், ஆர்தல்+ஐ எனப்பிரிந்து உண்ணுதலையுடைய தலைவன் எனப் பொருள்படும்.

நெடுங்கணி—நீண்ட கண்களையுடைய உமாதேவி.

சயவிரி—வெற்றியோடு விரிந்த என்பது திருத்தருமை யாதீனக் குறிப்புரை. சயம் என்ற சொல்லுக்குக் கூட்டம் என்ற பொருள் உண்மையால் கூட்டமாக அதாவது கொத்தாக விரிந்த மலர்கள் என நம்மால் பொருள் கொள்ளப்பட்டது.

கரியவன்நான்முகன் கைதொழுதேத்தக்
காணலுஞ்சாலும் ஆகா
எரியுருவாகியூ ரையம்
இடுபலியுண்ணியென் றேத்தி

வரியரவல்குல் மடந்தையொர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்
விரிமல ராயினதூவி
விகிர்தனசேவடி சேர்வோம். ...9

9. கரிய நிறத்தினனான திருமாலும் நான்முகனும் வணங்கித் துதிக்கவும், காண்பதற்கும் நெருங்குதற்குமியலாத எரிப்பிழம்பின் உருவாகியவரே! ஊரார் இடுகின்ற ஐயத்தையும் பிச்சையையும் உண்கின்றவரே! என்று துதித்து பொறிகளோடு கூடிய பாம்பின் படம் போன்ற அல்குல் மடந்தையாகிய உமாதேவியாரை ஓர் பாகமாகக் கொண்டவனை, திருவாழ்கொளிபுத்தூர்க் கோயில் கொண்ட விகிர்தனை சிவபிரானை, நன்கு அலர்ந்த மலர்களைத்தூவி அருச்சித்து அவன் சிவந்த திருவடிகளைச் சேர்வோம்.

விகிர்தன் — சதுரப்பாடு உடையவன்; எல்லாம் வல்ல இறைவன். விகாரமில்லாதவன் என்றும் பொருள் கூறப்படுகிறது

குண்டமணர்துவர்க் கூறைகள்மெய்யிற்
கொள்கையினர் புறங்கூற
வெண்டலையிற்பலி கொண்டல்
விரும்பினையென்று விளம்பி
வண்டமர்பூங்குழல் மங்கையொர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்த்
தொண்டர்கள் மாமலர்தூவத்
தோன்றிநின்றானடி சேர்வோம். ...10

10. குண்டர்களாகிய அமணர்களும், காவி நிறமுடைய உடைகளை உடம்பில் போர்த்துக் கொள்ளுதலையுடையவராகிய பௌத்தர்களும் பழிச்சொற்களைக் கூற, வெண்தலையில் பிச்சையெடுப்பதை விரும்பினீர் என்று கூறித் துதித்து, வண்டுகள் அமருகின்ற பூக்களைத் தரித்த கூந்தலையுடைய உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண்டவனும்,

தொண்டர்கள் சிறந்த மலர்களைத் தூவி வழிபட திருவாழ் கொளிபுத்தூரில் வெளிப்பட்டு நின்றவனுமாகிய நமது பெருமான் திருவடிகளைச் சேர்வோம்.

புறச்சமயத்தார் பழிச்சொற்களைக் கூறவும், தொண்டர் கட்கு வெளிப்பட்டு அருள் செய்யும் அண்ணலார் என்று கூறியவாறு.

**குண்டர்கள்**— இழிந்தவர்கள் என்ற பொருளைத் தரும்.

**வண்டமர் பூங்குழல் மங்கை**- வண்டமர் பூங்குழலி என்ற இத்தலத்து அம்பிகையின் திருநாமத்தை இப்பாடலில் குறிப்பிட்டுப் பாடியுள்ளது காண்க.

**கல்லுயர்மாக்கடல் நின்றுமுழங்குங்**
**கரைபொரு காழியமுதூர்**
**நல்லுயர்நான்மறை நாவின்**
**நற்றமிழ் ஞானசம்பந்தன்**
**வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும்**
**வல்லவன்வாழ்கொளி புத்தூர்ச்**
**சொல்லியபாடல்கள் வல்லார்**
**துயர்கெடுதல் எளிதாமே. ...11**

**திருச்சிற்றம்பலம்**

**11.** மலைகள் போல் உயர்ந்து, முழங்குகின்றனவும், கரையைப் பொருவனவுமாகிய அலைகளையுடைய பெரிய கடலருகேயுள்ள சீகாழி என்னும் மூதூரில் தோன்றிய நல்ல உயர்ந்த நான்கு வேதங்களையும் ஓதும் நாவினையுடைய நல்ல தமிழ் வல்லவனாகிய திருஞானசம்பந்தன், வலிய உயர்ந்த சூலமும், வெண்மழுப்படையும் வாளும் வல்லவனாகிய சிவபிரானைத் திருவாழ்கொளிபுத்தூரில் தரிசித்துச் சொல்லிய பாடல்களைப் பாடவல்லவர்களது துயர்கள் கெடுதல் மிகவும் எளிதாகும். (அதாவது மிக எளிதாகத் துயர்கள் கெடும் என்றருளிச்செய்தவாறு).

கல்லுயர் மாக்கடல்— மலை போல உயர்ந்து வரும் அலைகளையுடைய பெரிய கடல். கல்—மலை

கரைபொரு— கரையினைப் பொருகின்ற, அதாவது மோதுகின்ற.

நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன் என்றது நான்மறை ஓதும் மரபில் தோன்றி அம்மறைப் பொருளை நல்ல தமிழிலே உரைத்த ஞானசம்பந்தன் என்று கூறியதாம்.

நற்றமிழ்—நன்மை தரும் தமிழ். இங்கு நன்மை துயர் கெடுதலைக் குறித்தது.

சிவம்

---

# சிவஞான பூசை

## விசேஷ மலர் வெளியிடு

நமது மூவர் தமிழ்மாலைப் பதிப்புகளை விரைவாக வெளியிடவும், மேலும் பெரிதாக்கி ஒவ்வொரு இதழிலும் இன்னும் அதிகமான பதிகங்களும் விளக்கங்களும் பிரசுரிக்கவும் தேவையான நிதிக்காக இந்த மலர் வெளியிடப்படுகிறது.

உரையாசிரியர் ஸ்ரீ ஆங்கிரஸ சர்மாவின் சிவபுராண ஞான பூசையின் மணி விழா மலராக இது வெளியிடப்படும். பல பேராசிரியர்கள் தத்துவ நூலாசிரியர்கள் ஆகியோர்களின் சிறந்த கட்டுரைகள் 'மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்'' என்ற குறிக்கோளுடன் வெளியிடப்படும். சைவ மெய்யன்பர்கள் ஆதரிக்க வேண்டுகிறோம்.

—ஆங்கீரஸ சர்மா

---

சிவமயம்
சிவனுண்டு பயமில்லை

# திருவாழ்கொளிபுத்தூர்—2

பதிக வரலாறு: திருவாழ்கொளிபுத்தூரில் மாணிக்க வண்ணனை வண்டமர்பூங்குழலியுடன் துதித்துப் பாடிய பார் புகழ் பதிகங்கள் இரண்டில் இது இரண்டாவதாகும்.

பண்-பியந்தைக்காந்தாரம்] [2-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

சாகை யாயிர முடையார் சாமமும் ஓதுவ துடையார்
ஈகை யார்கடை நோக்கி யிரப்பதும் பலபல வுடையார்
தோகை மாமயி லனைய துடியிடை பாகமும் உடையார்
வாகை நுண்துளி வீசும் வாழ்கொளி புத்தூ ருளாரே. ...1

பதிகப் பொழிப்புரை:

1. வேதநூற்பிரிவுகள் ஆயிரம் உடையவர். சாமவேதம் ஓதுதலையுமுடையவர். ஈகைக்குணமுடையாரது வாயில்கள் தோறும் சென்று இரப்பதும் பலப்பல உடையவர். தோகையினையுடைய சிறந்த மயில் போல் சாயலையும் உடுக்கை போன்ற இடையினையும் உடைய உமாதேவியாரை ஒரு பாகமுமாக உடையவர். (இவரே) வாகை மலர்கள் நுண்ணிய தேன் துளிகளைச் சிந்துகின்ற திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளிய சிவபெருமானுவார்.

சாகை—வேதநூற்பிரிவு, அனந்தாவை வேதா: என்ற வசனப்படி வேதங்கள் அளவிறந்தன. அவைகளைத் தோற்றுவித்தவர் சிவபெருமானேயாதலின் அவரே அவற்றையுடையார் எனக் கூறினார். ஆயிரம் என்பது இங்குக் குறிப்பிட்ட எண்ணிக்கையைக் குறியாது அளவிறந்த எண்ணிக்கையைக் குறிக்கும். மேல் வருமிடங்களிலும் இவ்வாறே கொள்க.

துடி—உடுக்கை; துடியிடை—உடுக்கை போன்று சிறுத்த இடையினையுடைய உமாதேவியாரைக் குறிக்கும்.

வாகை ஒரு வகை மரம். இது இத்தலத்து தலமரமாகும். போரில் வெற்றி பெற்றவர் வாகை மாலை சூடுவதும் வெற்றி பெறுதலையே வாகை சூடினான் என்று கூறுதலும் மரபு. இதன் பூ மிகவும் மென்மையானது. மகாகவி காளிதாஸர் இப்பூவினைத் தவம் செய்யும் எண்ணமுடைய பார்வதி தேவியின் உடல் மென்மைக்கு உவமையாகக் கூறியுள்ளார். சிரீஷ புஷ்பம் (வாகைப் பூ) வண்டினுடைய பாதத்தைத் தாங்குமேயன்றி பறவையின் பாதங்களைத் தாங்காது என்பது அவர் கூறிய உவமை. பார்வதி தேவியின் மிருதுவான சரீரம் தவஞ் செய்தலில் உள்ள கஷ்டத்தைத் தாங்காது எனபது கருத்து.

இந்த மலர்களினின்றும் சிந்தும் தேன் துளிகளையே வாகை நுண்டுளி வீசும் எனக் கூறியருளினர்.

ஈகை—கொடுத்தல், ஈகையார் என்பதே இறைவரைக் குறித்துச் சொல்லியதாகவும் கொள்ளலாம். இறைவரைவிடப் பெரிய ஈகையார் (வள்ளல்) யாரே உளர்?

**எண்ணில் ஈரமும் உடையார் எத்தனை யோரிவர் அறங்கள்**
**கண்ணும் ஆயிரம் உடையார் கையுமொ ராயிரம் உடையார்**
**பெண்ணும் ஆயிரம் உடையார் பெருமையொ ராயிரம் [உடையார்**
**வண்ணம் ஆயிரம் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே...2**

2. அளவுபடாத கருணையையுடையவர். எத்தனை அறங்களை உடையவர் இவர்? ஆயிரக்கணக்கான கண்களும் கைகளும் உடையவர். இவர் பெண்ணும் ஆயிரம் உடையவர். ஆயிரம் பெருமையும் உடையவர். ஆயிரக் கணக்கான நிறங்களையுடையவர் (இவரே) திருவாழ்கொளி புத்தூரில் எழுந்தருளிய சிவபெருமானவார்.

இறைவனது கருணை எல்லையில்லாதது. உவமை யுரைக்க ஒண்ணாதது. அவனைப் பித்தன் என்று இதனாலேயே சுந்தரர் பெருமான் கூறினார்.

இவரறங்கள் எத்தனையோ என்பது இறைவனார் விரித்த அறநூல்களின் அளவு குறித்தது. அறநூற்கள் யாவும் இறைவரே உண்டாக்கினமையால் அனைத்தும் இவரது அறங்களாக எண்ணப்பட்டன.

ஆயிரங்கண்ணர், ஆயிரங்கையர் என்பதில் உள்ள ஆயிரம் என்ற சொல் அனேகம் என்ற பொருளைத் தரும்.

பெருமை--புகழ்; வண்ணம்—அழகு, நிறம், தன்மை, குணம் முதலிய பொருள்களைத் தரும்.

பெண்ணுமாயிரமுடையார்— சிவபெருமானுடைய திருவருளே சக்தியாகும். சக்தி பெண்ணாகக் கூறப்படுதலால் எங்கும் வியாபித்திருக்கிற சக்தியைப் பெண்ணுமாயிரமுடையார் எனக்கூறியருளினார் என்க. ஆணெலாம் இறைவன், பெண்ணெலாம் தேவியாகக் கூறப்படுதலாலும் பெண்மை உயிர்களைப் பெண்ணுமாயிரமுடையார் எனக் கூறினாரெனினும் அமையும்.

பெருமை யொராயிர முடையார் — இறைவனாரது புகழ் பலவாகலின் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. இறைவனாரது பல்வேறு அருட்டிறங்களைக் கந்தபுராணம், இலிங்க புராணம் முதலிய சிவபுராணங்களுள் காண்க.

நொடியொ ராயிரம் உடையார் நுண்ணிய ராமவர் நோக்கும்
வடிவும் ஆயிரம் உடையார் வண்ணமும் ஆயிரம் உடையார்
முடியும் ஆயிரம் உடையார் மொய்குழ லாளையும் உடையார்
வடிவும் ஆயிரம் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. ...3

3. நொடிகள் ஆயிரம் உடையவர். அவர் மிகவும் நுண்ணிய நோக்கினை உடையவராவர். ஆயிரக்கணக்கான

வடிவங்கள் உடையவர். ஆயிரக்கணக்கான தன்மைகளை உடையவர். ஆயிரம் திருமுடிகளையுமுடையவர். அடர்ந்த கூந்தலையுடைய உமாதேவியாரையும் உடையவர். வடிவும் ஆயிரம் உடையவர். (இவரே) திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானவர்.

நொடிகள்--காலத்தின் நுட்பமான அளவுகள். கால தத்துவமாயும் இருப்பவர் இறைவனூர் என்றவாறு.

"காலமாய்க் காலமின்றி ......" என்ற கந்தபுராணப் பாடலும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியது. (சூரபன்மன் வதைப்படலம்:70)

நுண்ணியர் — மிகவும் நுண்மையானவர். "நோக்கரிய நோக்கே, நுணுக்கரிய நுண்ணுணர்வே" (திருவாசகம்: சிவ புராணம்-76 வது வரி)

சிறந்த உண்மையுணர்வு கொண்டு உணர்வாருடைய கருத்தினாலும் நோக்குதற்கரிய நோக்கமே, நோக்குதற்கு மரிய நுண்ணுணர்வே என்பது இதன் பொருள்.

வடிவுமாயிரமுடையார் — உயிர்களுக்கு அருளும் பொருட்டு இறைவர் பல்வேறு வடிவங்களைத் தாங்கி நிற்றல் குறித்தது.

வண்ணமுமாயிரம் உடையார்—முன் திருப்பாடலில் கூறிய 'வண்ணம்' என்ற சொல்லுக்கு நிறம் என்று கொண்டால் இப்பாடலில் தன்மை அல்லது குணம் எனக் கொள்ளலாம்.

முடியுமாயிரம் உடையார் — இறைவனின் பேருருவத்தைக் குறித்ததாகும்.

வடிவுமாயிரமுடையார் — இதனை முன்னருங் கூறிப் பின்னருங் கூறியது உலகத்திலுள்ள எல்லாவற்றின் வடிவுமாயுமிருப்பவர் என்றதாம்.

மொய்குழலாள் — 'மொய்' என்னும் சொல் கூட்டம், பெருமை, வண்டு முதலிய பொருள்களைத் தரும். இங்கு அடர்ந்த கூந்தலையுடையவள், பெருமை பொருந்திய கூந்தலையுடைவள், வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடையவள் என்றெல்லாம் பொருள்பட்டு உமாதேவி யாரைக் குறித்தது. உமாதேவியின் கூந்தலுக்குப் பெருமை அது இயற்கை மணம் வீசுதலால் என்க.

இத்திருப்பதிகத்தின் மேற்கண்ட மூன்று பாடல்களா லும் இறைவனது எங்கணும் பரந்து, எல்லாமாய் நின்று அவற்றைக் கடந்து இருக்கும் தன்மையினைப் பாடியருளினர் ஆசாரிய மூர்த்திகள் எனக் கண்டு கொள்க.

கந்தபுராணம் மஹேந்திர காண்டத்தில் சூரபது மனுக்கு வீரபாஹுத்தேவர் முருகனின் முழு முதல் தன்மையினை அறிவுறுத்தும் வகையில் அமைந்த பின்வரும் பாடலையும் இங்குக் கருதுக.

எங்க ணும்பணி வதனங்கள் எங்கணும் விழிகள்
எங்க ணும்திருக் கேள்விகள் எங்கணும் கரங்கள்
எங்க ணும்திருக் கழலடி எங்கணும் வடிவம்
எங்க ணும்செறிந் தருள்செயும் அறுமுகத் திறைக்கே.

பகவத்கீதையில் 13 வது அத்தியாயம் 13 வது சுலோக மும் இங்கு ஒப்பு நோக்குதற்குரியது.

ஸர்வத: பாணி பாதம் தத் ஸர்வதோக்ஷி சிரோமுகம் |
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ||

(இதன் பொருள்) அந்தப் பிரம்மம் எங்கும் கைகால்களை உடையது. எங்கும் கண்கள், தலைகள், வாய்கள் இவைகளை உடையது. எங்கும் செவிகளையுடையது. உலகனைத்தையும் அது வியாபித்திருக்கின்றது.

'புருஷ ஸூக்தம்' என்னும் வேதமந்திரமும் இதே கருத்தை வலியுறுத்துதல் காண்க:

ஸஹஸ்ர சீர்ஷா: புருஷ: | ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத் |
ஸபூமிம் விச்வதோவ்ருத்வா |

(இதன் பொருள்) ஆயிரம் சிரங்களையும், ஆயிரம் கண்களையும், ஆயிரம் பாதங்களையும் உடைய புருஷன் இவ்வுலகனைத்தையும் எல்லாத்திசைகளிலும் சூழ்ந்திருக்கின்றான்.

பஞ்சி நுண்துகி லன்ன பைங்கழற் சேவடி யுடையார்
குஞ்சி மேகலை யுடையார் கொந்தணி வேல்வல னுடையார்
அஞ்சும் வென்றவர்க் கணியார் ஆனையின் ஈருரியுடையார்
வஞ்சி நுண்ணிடை யுடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே ...4

4. பஞ்சினுடைய நுண்ணிய துகில் போன்றதும் பசிய கழல்களை அணிந்ததுமான சிவந்த திருவடிகளை உடையவர். சடைமுடியின் மீது சந்திரகலையினை உடையவர். கோபத்தை அணியாகக் கொண்ட வேலினைத் (இங்குச் சூலாயுதங் குறித்தது) தமது வலது கரத்தில் உடையவர். ஐம்புலன்களையும் வென்றவர்களுக்கு மிகவும் நெருங்கினவர். யானையின் உரித்த தோலினை உடையாகக் கொண்டவர். வஞ்சிக் கொடி போலும் நுண்மையான இடையினையுடைய உமாதேவியாரையும் உடையவர் (இவரே) திருவாழ்கொளி புத்தூரில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானவர்.

குஞ்சி—தலைமயிர், இங்குச் சடைமுடியைக் குறித்தது.

குஞ்சி மேகலையுடையார்—'குஞ்சி மேற் கலையுடையார்' என்பது இவ்வாறு வந்ததோ எனக்கொண்டு சடை முடி மேல் சந்திர கலையையுடையவர் எனப் பொருள் கொள்ளப் பட்டது. இவ்வாறு கொள்ளாக்கால் 'குஞ்சி மேகலை' அதாவது சடை முடியின் மேல் மேகலையுடையார் என்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. மேகலை என்பது மகளிர் இடையில் அணியும் அணிகலனும். அதனைச் சடைமுடி மேல் கொள்ளுமாறில்லை. எனவே நாம் ஊகித்து எழுதியதே சரியானது என்று எண்ணுகிறோம்.

குஞ்சி மேகலை எனவே கொள்வதாயின் சிவபிரான் ஊழிக்காலத்து முடிவில் மாண்டு போன தேவர்களின் தலை மயிரைத்திரித்து பூணூலாக அணிவர் என்று கூறப்படு தலால், அவ்வாறு அத்தலைமயிரையே திரித்து, அரை ஞாணு கவும் ஒருக்கால் அணிதல் கூடும் என்பது 'மேகலை' என்னும் சொல்லால் குறிக்கப்படுகிறதோ என்று ஐயமேற்படுகிறது. இவ்வாறு கொள்வதன் பொருத்தம் ஆராய்ச்சிக்குரியது.

கொந்தணி வேல்—கொந்து—கோபம் எனப் பொருள் படும். எறிவாரது கோபம் எறியப்படும் வேல் மீது ஏற்றிக் கூறப்பட்டது;

அஞ்சும் வென்றவர்— புலன்களின் வழித் தாம் செல் லாது, புலன்களைத் தம் வழிச் செலுத்தும் ஆற்றலுடையார். "தம்மை ஐந்து புலனும் பின் செல்லும் தகையார்" என்ற தெய்வச் சேக்கிழார் திருவாக்கும் காண்க. (சண்டேசுர நாயனார் புராணம், 'செம்மை வெண்ணீற்றொருமையினர்' எனத் தொடங்கும் பாடல்).

பரவு வாரையும் உடையார் பழித்திகழ் வாரையும் உடையார்
விரவு வாரையும் உடையார் வெண்டலைப் பலிகொள்வ
[துடையார்
அரவம் பூண்பதும் உடையார் ஆயிரம் பேர்மிக வுடையார்
வரமும் ஆயிரம் உடையார் வாழகொளி புத்தூ ருளாரே ...5

5. தம்மைப் புகழ்பவர்களையும் உடையவர். பழித்து இகழ்பவர்களையும் உடையவர். உள்ளத்தால் கலந்து நிற்கும் மெய்யன்பர்களையும் உடையவர். வெள்ளிய தலையில் பிச்சை ஏற்றலையுமுடையவர். பாம்பினை அணிகலன்களாகப் பூண் பதும் உடையவர். ஆயிரக்கணக்கான திருநாமங்களை உடையவர். அடியார்களுக்கு வழங்க ஆயிரம் ஆயிரமாக வரங்களையுடையவர். (இவரே) திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானாராவர்.

பரவுவார் என்பது தேவர்களையும் விரவுவார் என்பது நிலவுலகத்து மெய்யடியார்களையும் குறிக்கும் என்பது திருத் தருமை ஆதீன உரைக்குறிப்பின் கருத்து. இதற்கு 'பரவுவார் இமையோர்கள் ..... விரவுவார் மெய்யன்பின் அடியார்கள்' என்ற திருவாசகம் திருச்சதகம் 17-வது திருப் பாடற்பகுதி ஆதரவாகக் காட்டப்பட்டுள்ளது.

விரவுதல்—உள்ளங்கலந்து ஒன்றுபடுதல்.

பழித்து இகழ்வாரையுமுடையார்—இது புறச்சமயிகளை மட்டுமன்றிக் கடவுளே இல்லையென்று வல்வழக்கிடும் நாத்திகர்களையுங் குறித்து நின்றது. அவர்களையும் உணவளித்துக் காப்பவர் இறைவரேயாம் என்க.

வரம்—மேன்மை, பெருமை எனப் பொருள் கொள்ளின் ஆயிரக்கணக்கான பெருமைகளையுடையவர் என்பது பொருளாகும்.

தண்டுந் தாளமுங் குழலும் தண்ணுமைக் கருவியும் புறவில்
கொண்ட பூதமும் உடையார் கோலமும் பலபல வுடையார்
கண்டு கோடலும் அரியார் காட்சியும் அரியதொர் கரந்தை
வண்டு வாழ்பதி யுடையார் வாழ்கொளி புத்தா ருளாரே ...6

6. வீணை, தாளம், குழல், தண்ணுமைக் கருவி ஆகியவைகளும், காடுகளில் உள்ள பல பூதங்களும் உடையவர். பலபல கோலமும் உடையவர். கண்டு கொள்ளற்கு அரியவர். அரிய காட்சியினையுடையவர். கரந்தைப் பூவில் வண்டு வாழ்கின்ற வளமுடைய பதியினை உடையவர் (இவரே) திருவாழ்கொளிபுத்தூரில் கோயில் கொண்ட சிவபிரானாராவர்.

இறைவனார் பூதங்கள் புடை சூழ, வீணை முதலிய வாத்தியங்கள் முழங்க ஆடுகின்ற கோலம் உடையவர். அவர் காட்சி கொடுத்தலும் அரிது. அவரைக் கண்டு கொள்வதும் அரிது என்பன போன்ற பெருமைகளையுடையவர் என்பதாம்.

கரந்தை ஒருவகை மலர். பகைவர் கவர்ந்து சென்ற பசுக்கூட்டத்தை மீட்டு வருவோர் அணிவது கரந்தைப்பூ என்று புறப்பொருள் இலக்கணம் கூறும்.

மான வாழ்க்கைய துடையார் மலைந்தவர் மதிற்பரி சறுத்தார்
தான வாழ்க்கைய துடையார் தவத்தொடு நாம்புகழ்ந் தேத்த
ஞான வாழ்க்கைய துடையார் நள்ளிருள் மகளிர்நின் றேத்த
வான வாழ்க்கைய துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. .7

7. பெருமையான வாழ்க்கையினையுடையவர். பகைவரது மதில்களின் தன்மையினை அழித்தவர். பிறர்க்கு அருள் செய்யும் வாழ்க்கையையுடையவர். அடியார்களாகிய நாம் புகழ்ந்து ஏத்தத் தவத்தோடு ஞான வாழ்க்கையையும் உடையவர். நள்ளிருளில் மகளிர் நின்று ஏத்தும்படி வான வாழ்க்கையது உடையவர். (இவரே) திருவாழ்கொளி புத்தூரில் கோயில் கொண்ட சிவபிரானுராவார்.

மலைந்தவர் மதில் — முப்புரத்து அசுரரின் மும்மதில்களைக் குறித்தது.

பரிசறுத்தார் — அவைகள் பறந்து திரிந்து உலகினர்க்குத் துன்பஞ் செய்து வந்ததனை அம்மதில்களை எரித்தல் மூலம் மாற்றினுர் என்பதாம்.

நள்ளிருள் ..... வான வாழ்க்கையதுடையார் என்றது நள்ளிருளில் நட்டம் பயின்றுடும் நாதனுதலின் அப்பொழுது புகழ்ந்து துதிக்கின்ற ருத்திராணிகளின் கூட்டம் நிறைந்த சிவலோக வாழ்க்கையினை உடையவர் என்று கூறியதாம். வானம் என்ற சொல் திருமுறைகளில் சிவலோகம் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளதைப் பலஇடங்களில் காணலாம்.

ஏழும் மூன்றுமோர் தலைகள் உடையவன் இடர்பட அடர்த்து
வேழ்வி செற்றதும் விரு ்பி விருப்பவர் பலபல வுடையார்
கேழல் வெண்பிறை யன்ன கெழுமணி மிடறுநின் றிலங்க
வாழி சாந்தமும் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. ...8

8. பத்துத் தலைகளையுடைய இராவணன் துன்பப் படுமாறு அவனை நெருக்கி, தக்கன் செய்த வேள்வியை அழித்தலை விரும்பியவர். பலப்பல விருப்பங்களையுடையவர். பன்றியின் கொம்பு, வெண்பிறை மற்றும் அவைபோல்வனவும், அழகிய கழுத்தும் விளங்க, மார்பில் சந்தனமும் உடையவர். (இவரே) திருவாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளிய சிவபிரானாராவார்.

சாந்தம் -பொறுமை என்றும் கொள்ளலாம். சிவத்தினை சாந்தம் என்று உபநிஷத் கூறுகின்றது.

**வென்றி மாமல ரோனும் விரிகடல் துயின்றவன் தானும்**
**என்றும் ஏத்துகை யுடையார் இமையவர் துதிசெய விரும்பி**
**முன்றில் மாமலர் வாசம் முதுமதி தவழ்பொழில் தில்லை**
**மன்றி லாடல துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. ...9**

9. வெற்றியுடைய தாமரை மலரோனாகிய பிரம்ம தேவனும், அகன்ற கடலில் துயின்றவனாகிய திருமாலும் என்றும் துதித்தலையுடையவர். தேவர்கள் துதி செய்ய (அதை) விரும்பி முன்றிலில் சிறந்த மலர்களின் வாசம் கமழ்வதும், முதிய சந்திரன் தவழ்வதுமான பொழில்களையுடைய தில்லை மன்றில் நடனமாடுதலையும் உடையவர். (இவரே) திருவாழ்கொளிபுத்தூரில் கோயில் கொண்டுள்ள சிவபிரானாராவார்.

**மண்டை கொண்டுழல் தேரர் மாசுடை மேனிவன் சமணர்**
**குண்டர் பேசிய பேச்சுக் கொள்ளன்மின் திகழொளி நல்ல**
**துண்ட வெண்பிறை சூடிச் சுண்ணவெண் பொடியணிந் [தெங்கும்**
**வண்டு வாழ்பொழில் சூழ்ந்த வாழ்கொளி புத்தூ ருளாரே. 10**

10. கஞ்சி உணவினைக் கொள்ளும் மண்டை எனப்படும் பாத்திரத்தைக் கொண்டு திரியும் பௌத்தர்களும், அழுக்கடைந்த உடலையுடையவர்களாகிய கொடிய சமணர்களும்

இழிந்தவர்கள். அவர்கள் பேசுகின்ற பேச்சுக்களை உண்மை யாகக் கொள்ளாதீர்கள். நமது தலைவராகிய சிவபிரானுர் நல்ல ஒளி திகழ்கின்ற வெண்மையான பிறைச் சந்திரனைச் சூடி, சுண்ணமான வெண்மையான திருநீறு அணிந்து, எங்கும் வண்டுகள் வாழ்கின்ற பொழில்கள் சூழ்ந்த வாழ் கொளிபுத்தூரில் இருக்கின்ருர். (அவரைச் சென்று பணி யுங்கள் என்று கூறியவாறு).

மண்டை—இச்சொல்லுக்குப் புத்தர்கள் உண்கலமாகக் கொள்ளும் ஒரு பாத்திரம் என நாம் முன்னர் பொதுவாக உரைவெளியிட்டிருந்தோம். [த. மா. 2, பக்கம்-34] தூத்துக் குடியிலிருந்து சைவ சாஸ்திர, இலக்கியப் புலமை நிறைந்த ஒரு பேரறிஞர் "சட்டி ரூப வடிவ உண்கலத்துக்கு மண்டை என்பது சங்க இலக்கியத்துள் பயின்று வரும் சொல்லாகும். அஃது அவரவர் தகுதிக்கேற்ப உயர்ந்த பொருளாலும் செய்யப்படும். 'மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி யீனுத் தாயர் மடுப்பவு முண்ணுள்' என்பது அகநானூறு, என விளக்கம் எழுதியுள்ளார்கள். அவர்கட்கு நன்றி செலுத்தி, இத்தகைய விளக்கங்கள் பெரிதும் வரவேற்கப்படும் என்று குறிப்பிட விரும்புகிறேம்.

நலங்கொள் பூம்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
வலங்கொள் வெண்மழு வாளன் வாழ்கொளி புத்தூ ருளானை
இலங்கு வெண்பிறை யானை யேந்திய தமிழிவை வல்லார்
நலங்கொள் சிந்தைய ராகி நன்னெறி யெய்துவர் தாமே. ...11

திருச்சிற்றம்பலம்

*11.* நன்மைகள் நிறைந்த பூம்பொழில்கள் சூழ்ந்த சீகாழியில் அவதரித்த நற்றமிழ் ஞானசம்பந்தன், வலது கரத்தில் வெண்மழுவேந்தியவரும். திருவாழ்கொளிபுத்தூரில் உறைபவரும், விளங்குகின்ற வெண்மையான பிறைச் சந்திரனை அணிந்தவருமான சிவபெருமானைத் துதித்துப்

பாடிய தமிழ்ப் பாடல்களாகிய இவை வல்லவர்கள் நன்மை நிறைந்த மனத்தினையுடையவராகி நன்னெறியாகிய ஞானத்தினை அடைவார்கள்.

நலம்—குறைவில்லாத மங்கலம்

நன்னெறி— சன்மார்க்கம்; அதாவது வீடுபேற்றினை அளிக்கவல்ல ஞானம்.

சுவாமி—மாணிக்கவண்ணர்] [தேவி—வண்டமர்பூங்குழலி

சிவம்.

---

சிவிகையை யாண்டுப் பெற்றான் கொல் என வினவுவோம்

தேனே றலர்சூடிச் சில்பலிக்கென் றூர்திரியும்
ஆனேறி யாண்டுப்பெற் றான்கொல்நீ—தானேறும்
வெள்ளைமணி யென்று வினவுவோம் வாங்கியவப்
பிள்ளையையாம் காணப் பெறின்.

—நால்வர் நான்மணிமாலை-29

வண்டுகள் ஏறும் மலர்களைச் சூடிக்கொண்டு சிறுபலி யின் பொருட்டு ஊர்கள் தோறும் திரியும் இடபவாகனன் ஆகிய பெருமான் "நீ ஏறும் வெள்ளை முத்துச் சிவிகையினை யாங்குப் பெற்று உனக்குத் தந்தான்" என அச்சிவிகையைப் பெற்ற ஞானசம்பந்தப் பிள்ளையாரை யாம் தரிசிக்கப் பெறுவோமாயின் கேட்போம். தமக்குப் பிச்சையின் பொருட்டு ஊர் திரிபவர் வெண்மணிச் சிவிகையினை எங்ஙனம் அளிக்க இயலும்? எனவே அதனை எவரிடம் வாங்கி உமக்கீந்தார் என்று பிள்ளையாரைக் காணப் பெற்றால் வினவுவோம் என்றதாம்.

---




உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருக்கடம்பூர்

[கடம்பைக் கரக்கோயில்]

பதிக வரலாறு:- திருவாழ்கொளிபுத்தூரில் இறைவரைத் தரிசித்துப் பார்புகழ் பதிகங்கள் பாடிப் பணிந்த திருஞான சம்பந்தப்பிள்ளையார், அங்குநின்றும் புறப்பட்டுத் திருக் கடம்பூர் வந்து சேர்ந்தார். கடம்பைக் கரக்கோயில் என வழங்கும் இக்கோயிலில் இறைவரைப் பணிந்து மகிழ்ந்த போது பாடியருளியது இவ்வருமைத் திருப்பதிகம். திருக் கடம்பூரில் கோயில் கொண்ட பெருமானைத் தொழ வீடு பேறு கிட்டுதல் எளிதாகும் என்பது இப்பதிகக் குறிப்பாகும்.

**பண்—காந்தாரம்]** **[2-ம் திருமுறை**

திருச்சிற்றம்பலம்

**வானமர் திங்களும் நீரும் மருவிய வார்சடை யானைத்**
**தேனமர் கொன்றையி னானைத் தேவர் தொழப்படு வானைக்**
**கானம ரும்பிணை புல்கிக் கலைபயி லுங்கடம் பூரில்**
**தானமர் கொள்கையி னானைத் தாள்தொழ வீடெளி தாமே ... 1**

**பதிகப் பொழிப்புரை :**

**1. வானத்தில் பொருந்திய பிறைச் சந்திரனும் கங்கை யும் கலந்த நீண்ட சடையினையுடையவரும், தேன் பொருந் திய கொன்றைமலர் மாலையைத் தரித்தவரும், தேவர்களால் தொழப்படுகின்ற பெருமானும், காட்டிலே வாழும் பெண் மான்களைத் தழுவிக் கலைமான்கள் பயிலுகின்ற திருக்கடம் பூரில் தான் விரும்பி எழுந்தருளியிருக்கும் கொள்கையினை உடையவரான சிவபிரானரது திருத்தாள்களைத் தொழ வீடு பேறு அடைதல் மிகவும் எளிதாகும்.**

பிணை—பெண்மான்; கலை—ஆண்மான்.

பயிலுதல்-பழகுதல், கடம்பூர்—கடம்புமரம் தலவிருட்சமாக அமைந்த ஊர்.

அமர்தல் என்பது இருத்தல், நெருங்கல், படிதல், பொருந்துதல் வாய்த்தல், விரும்பல் முதலிய பல பொருள்களைத் தருமாதலின், இடம் நோக்கித் தக்கவாறு பொருள் கொள்க.

அரவினொ டாமையும் பூண்டு அந்துகில் வேங்கை அதளும்
விரவுந் திருமுடி தன்மேல் வெண்டிங்கள் சூடி விரும்பிப்
பரவுந் தனிக்கடம் பூரில் பைங்கண்வெள் ளேற்றண்ணல் [பாதம்
இரவும் பகலும் பணிய இன்பம் நமக்கது வாமே ...2

2. பாம்பினோடு ஆமையோட்டினையும் அணிகலன்களாக அணிந்துகொண்டு, அழகிய புலித்தோலாகிய ஆடையுமணிந்து, (கங்கை, கொன்றை முதலியவை) கலந்திருக்கும் திருமுடியின்மேல் வெண்திங்களையும் சூடி (மெய்யடியார்கள்) எந்நாளும் விருப்பத்துடன் துதிக்கின்ற தனிப் பெருமையுடைய திருக்கடம்பூரில் பசிய கண்களையுடைய வெண்மையான எருதினையூரும் தலைவனது திருப்பாதங்களை இரவும் பகலும் பணிய, அதுவே நமக்குப் பெரும் இன்பத்தைக் கொடுப்பதாகும். (அதாவது இறைவரது திருவடிகளைத் தொழுதலாகிய செயலே இன்பத்தை விளைவிக்கும் என்பதாம்.)

இத்திருப்பாடலில் சில சொற்களை இடம் நோக்கி வருவித்து உரைத்தாலொழிய பொருளமைதி விளங்காது. எனவே 'விரவும்' என்பதன் முன் 'கங்கை, கொன்றை முதலியவை' எனவும் 'விரும்பிப் பரவும்' என்பதன் முன் மெய்யடியார்கள் என்றும் வருவித்துப் பொருள் கூறப் பட்டது.

'விரும்பிப்பரவும்' என்பதை 'தனிக்கடம்பூரில் விரும்பிப் பரவும் பைங்கண் வெள்ளேற்றண்ணல்' என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். இங்கும் 'அடியார்கள்' அல்லது அன்பர்கள்' போன்றதொரு சொல்லை வருவித்துக் கொள்ளல் வேண்டும்.

இளிபடு மின்சொலி ஞர்கள் இருங்குழல் மேலிசைந் தேறத்
தெளிபடு கொள்கை கலந்த தீத்தொழி லார்கடம் பூரில்
ஒளிதரு வெண்பிறை சூடி ஒண்ணுத லோடுட னாகிப்
புலியத ளாடை புனைந்தான் பொற்கழல் போற்றுது நாமே .. 3

3. 'இளி' என்னும் இசை பொருந்திய இனிய சொல்களையுடைய பெண்மணிகளது நீண்ட கூந்தலின் மேல் பொருந்தி (வேள்விப் புகை) ஏறும் படியாக, வேதத்தின் தெளிவு பொருந்திய கொள்கை கலந்த வேள்விகள் பொருந்திய திருக்கடம்பூரில், ஒளிமிக்க வெண் பிறையினைச் சூடிக் கொண்டு, உமாதேவியாரொடு உடனாகி, புலித்தோலாடை அணிந்தவனான சிவபிரானது பொன் போலும் சேவடிகளை நாம் போற்றுவோம்.

இளி — ஏழு இசையுள் ஒன்று. இந்த இசை போன்ற இனிய சொற்களையுடைய பெண்கள்.

இத்திருப்பாடல் திருக்கடம்பூர் வேள்விகள் செய்யும் மறையவர் வாழ்கின்ற ஊர் எனக் கூறுகிறது. அந்தணர்கள் வேள்வி செய்யும் பொழுது அவர்களது மனைவியரும் அருகே நிற்பர். வேண்டிய பணிகளைச் செய்வர். அப்பொழுது வேள்வியினின்றும் எழும் புகை அவர்களுடைய கூந்தலில் நிறம் வேறுபாடு தெரியாதபடிப் பொருந்தி ஏறும் என்பதாம். இதனால் மறையவர்களது வேள்வித் தொழிலுக்கு அவர்களது மனைவியரும் உடனிருந்து பணி புரிவர் என்பதைக் குறிப்பால் பெற வைத்தார் என்க.

தீத்தொழில்—இங்கு வேள்வியினைக் குறித்தது. அக்னி கார்யம் என்பது வடமொழி வழக்கு.

தெளிபடு கொள்கை— வேதங்களின் தெளிவு பட்ட கொள்கை. அதாவது வேள்விகள் செய்தல்.

ஒளிதரு பிறை—வெண்பிறை.

ஒண்ணுதல் — ஒள் + நுதல் = ஒளியதாகிய நெற்றி எனப் பொருள்பட்டு அதனையுடைய உமாதேவியாரைக் குறித்தது. பண்புத்தொகையிடத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்பர் இலக்கண நூலார்.

உடனாகி —ஒரு சேர இருந்து.

**பறையொடு சங்க மியம்பப் பல்கொடி சேர்நெடு மாடம்**
**கறையுடை வேல்வரிக் கண்ணார் கலையொலி சேர்கடம் பூரில்**
**மறையொலி கூடிய பாடல் மருவிநின் றாடல் மகிழும்**
**பிறையுடை வார்சடை யானைப் பேணவல் லார்பெரி யோரே**
**...4**

4. வாத்தியங்களோடு சங்கங்களும் ஒலிக்கப்பலவகைக் கொடிகள் சேர்ந்த நெடிய மாடங்களிலே கறைபடிந்த வேல் போன்ற கூர்மையுடையவையும் செவ்வரி படர்ந்தவையு மான கண்களையுடைய பெண்களின் ஆடல் பாடல்களின் ஒலி சேர்ந்த திருக்கடம்பூரில், வேத முழக்கத்துடன் கூடிய கீதங் களுடன் பொருந்தி நின்று ஆடுதலை விரும்புகின்ற, பிறைச் சந்திரனையுடைய சடை முடிப் பெருமானாகிய சிவபிரானை விரும்பி வழிபட வல்லவர்களே பெரியோர்கள் ஆவார். (மற்றையோர் பெரியோர்களாக மாட்டார்கள் என்பதாம்.)

பகைவருடம்பிற்பட்டு இரத்தம் தோய்ந்து உலர்ந்து வேல் மீது கறை படிந்திருக்குமாதலின் **கறையுடை வேல்** எனப்பட்டது. பெண்களது கண்களுக்கு வேலினை உவ மிப்பது வழக்கம்.

கலையொலி—பெண்களது ஆடல்பாடல்களால் ஏற்படும் ஒலி. அல்லது கலை என்பதற்கு மேகலை என்ற இடையில் அணியும் அணிகலனெனக் கொண்டால் அப்பெண்கள் ஆடும்

பொழுது இடையில் உள்ள மேகலைகள் செய்கின்ற ஒலி எனப் பொருள் கிடைக்கும்.

வாத்திய ஒலிகளோடு சங்கின் ஒலிகளும் சேர்ந்து ஒலிக்கும் நெடுமாடங்களில் பெண்களின் ஆடல் பாடல் நிறைந்திருக்கும் திருக்கடம்பூர் என்று ஊரின் பெருமை கூறியவாறு.

இறைவனுர் ஆடும்போது வேத ஒலியும் கீத ஒலியும் சேர்ந்து ஒலிக்கும். இவ்வொலியினை மகிழ்ந்து ஏற்று பிறை யுடைய வார்சடையான் மகிழ்ந்தாடுவார் என்று பிள்ளையார் அருளிச் செய்தனர். அத்தகைய பெருமானைப் பேண வல்லவரே பெரியோர். மற்று அவ்வாறு பேண வல்லாதார் வேறு எவ்வகையிற் பெரியோரேனும் உண்மையிற் சிறியரே ஆவர் என்பது பிள்ளையாரின் திருவுள்ளக்கிடக்கையாகும்.

**தீவிரி யக்கழ லார்ப்பச் சேயெரி கொண்டிடு காட்டில்**
**நாவிரி கூந்தனற் பேய்கள் நகைசெய்ய நட்ட நவின்ரேன்**
**காவிரி கொன்றை கலந்த கண்ணுத லான்கடம் பூரில்**
**பாவிரி பாடல் பயில்வார் பழியொடு பாவ மிலாரே .. 5**

5. தீப்போன்ற சடை விரியவும், திருவடிகளிலே தரித்த வீரக்கழல்கள் ஒலிக்கவும், செந்நிறங்கொண்ட தீயினைக் கையிலேந்திக் கொண்டு, சுடுகாட்டில் நீட்டிய நாக்கையும் விரித்த கூந்தலையுமுடைய நல்ல பேய்க் கூட்டங்கள், நகைத் தலைச் செய்யும்படி நடனமாடுகின்ற பெருமான், சோலை களில் மலருகின்ற கொன்றை மலர்கள் கலந்த சடைமுடி யினையுடைய கண்ணுதற் கடவுள், (இவரை) திருக்கடம் பூரில் செய்யுளோசை பெருகிய பாடல்களால் துதிக்கப் பழகு பவர்கள் பழியும் பாவமும் இல்லாதவராவர். (அதாவது புகழும் புண்ணியமும் உள்ளவராவர் என்பது கருத்து).

தீவிரிய—இறைவனுரது செஞ்சடைக்குத் தீயினை உவ மிப்பது உண்டு. தீ நிறம் வாய்ந்த சடையை 'தீ' என்று உபசரித்தார்.

இடுகாட்டில் நட்டம் நவின்றோன்—உலகமனைத்தும் கற் பொடியென அழியும் ஸர்வ சங்கார காலத்தில் இறைவனார் மட்டும் தனியாக விளங்கித் திருநடனம் புரிதலைக் குறித்தது.

பாவிரிதல்—ஓசையின்பம் பெருகுதல்.

தண்புனல் நீள்வயல் தோறும் தாமரை மேலனம் வைகக்
கண்புணர் காவில்வண் டேறக் கள்ளவி ழுங்கடம் பூரில்
பெண்புனை கூறுடை யானைப் பின்னு சடைப்பெரு மானைப்
பண்புனை பாடல் பயில்வார் பாவமி லாதவர் தாமே. .. 6

6. குளிர்ந்த நீர் நிறைந்த வயல்கள்தோறும் தாமரை மலர்களில் அன்னப்பட்சிகள் வசிக்கக் கண்கள் தாமாகவே சென்று அடையும் அழகுடைய சோலைகளில் வண்டுகள் ஏற, மலர்கள் மலர்தலால் தேன் நெகிழ்ந்து சொட்டுகின்ற திருக் கடம்பூரில், பெண்ணை வைத்த ஒரு பாகத்தையுடையவனும், பின்னிய சடைகளை உடையவனுமான சிவபெருமானை பண்கள் சேரப் புனையப்பட்ட பாடல்களைப பாடிப் பயிலு பவர்கள் பாவமற்றவர்களாக ஆவார்கள்.

கண் புணர் கா—கண்கள் தாமாகவே சென்று பதியும் படியான அழகுத் தோற்றமுடைய சோலை. கண்ணைக் கவரு கின்ற சோலை என்பதாம்.

கள்—தேன்; அவிழும்—மொட்டாக இருக்கும் மலர்கள் தேன் சொட்டும்படி மலர்தல். பெண்புனை கூறுடையான்— மாதியலும் பாதியன், அர்த்த நாரீச்வரன்.

பன்புனை பாடல்—பண்ணின் பயனாகிய இசை கலந்த பாடல் என்பதாம்.

பலிகெழு செம்மலர் சாரப் பாடலொ டாடல் அறாத
கலிகெழு வீதி கலந்த கார்வயல் சூழ்கடம் பூரில்
ஒலிதிகழ் கங்கை கரந்தான் ஒண்ணுத லாள்உமை கேள்வன்
புலியத ளாடையி னான்றன் புனைகழல் போற்றல் பொருளே ...7

7. பூசனைக்குப் பொருந்திய செய்ய மலர்களுடன் அடியார்கள் வந்தடையப் பாடலோடு ஆடல்களும் என்றும் நீங்காத ஒலி மிகுந்த வீதிகளுடன் கலந்த கார்வயல்களும் சூழ்ந்த கடம்பூரில், ஒலியுடன் கூடிய கங்கையினைச் சடையில் மறையும்படித் தங்க வைத்தவனும், ஒளிமிக்க நெற்றியினையுடைய உமையம்மையாரின் கணவனும், புலித்தோலை ஆடையாகக் கொண்டவனுமான சிவபெருமானை அலங்கரிக்கப்பட்டவையும், கழல்கள் அணிந்தவையுமான திருவடிகளைப் போற்றுதலே இப்பிறவியில் பொருள் உள்ள செய்கையாகும்.

சிவபிரானது திருவடிகளைப் போற்றுதலே இப்பிறவி எடுத்ததற்குப் பொருள் உள்ள அதாவது பயன் உள்ள செயலாகும்.

பூம்படு கிற்கயல் பாயப் புள்ளிரி யப்புறங் காட்டில்
காம்படு தோளியர் நாளுங் கண்கவ ருங்கடம் பூரில்
மேம்படு தேவியொர் பாகம் மேவியெம் மானென வாழ்த்தி
தேம்படு மாமலர் தூவித் திசைதொழத் தீய கெடுமே. 8

8. பூக்கள் நிறைந்த நீர் நிலைகளில் கயல் மீன்கள் பாய அதன் ஒலியினால் அங்கு வசிக்கும் பறவைகள் பறந்து ஓடும்; காடுகளில் வளரும் மூங்கில்களையொத்த தோள்களையுடைய பெண்களின் கண்களை நாள் தோறும் (இக்காட்சியானது) கவரும். அத்தகைய திருக்கடம்பூரில் மேன்மையுடைய தேவியார் ஓர் பாகமாகப் பொருந்திய எம்பெருமான் என்று துதித்துத் தேன் சொரிகின்ற சிறந்த மலர்களைத் தூவி வழிபட தீமைகள் யாவும் அழிந்து போகும்.

நயப்பினால் மூங்கிலையும் வென்ற தோள்களையுடைய பெண்களின் கண்களை நாளும் கவரும் காட்சி கயல் பாயப் புள் இரிதலாம். அப்பெண்களின் கண்களை ஒவ்வாது கயல் தோற்றோடி நீர் நிலைகளில் மறைந்து கொள்ளுவதாக இதனை அப்பெண்கள் கண்டு களிப்பர் என்பதாம். அல்லது அந்த

பெண்களின் கண்களைக் கவரும் அழகுடைய திருக்கடம்பூர் எனவும் கொள்ளலாம்.

அம்மையப்பன், எம்பெருமான் எனப்போற்றி நல்ல மலர்கள்கொண்டு அருச்சித்து கடம்பூர் இருக்கும் திசையைத் தொழுதாலும் தீயவை கெடும் என்றவாறு.

**திருமரு மார்பி லவனுந் திகழ்தரு மாமல ரோனும்**
**இருவரு மாயறி வொண்ணு எரியுரு வாகிய ஈசன்**
**கருவறை காலில் அடர்த்த கண்ணுத லான்கடம் பூரில்**
**மருவிய பாடல் பயில்வார் வானுல கம்பெறுவாரே ...9**

*9.* திருமகள் மருவிய மார்பினையுடைய திருமாலும், செந்தாமரை மலரோனாகிய பிரமதேவனும் ஆகிய இருவரும் அடிமுடி அறிய ஒண்ணு எரியுருவாகிய ஈசன், கரியமலை போன்ற இராவணனைக் கால் விரலால் நெருக்கிய நெற்றிக் கண்ணன் திருக்கடம்பூரில் எழுந்தருளியுள்ள இப்பெருமானை அவனது புகழ் பொருந்திய பாடல்களால் துதிக்கப் பழகுபவர்கள் சிறந்த வீட்டுலகம் பெறுவார்கள்.

**கருவரை** — இங்குக் கரியமலை போன்ற இராவணனைக் குறித்தது.

**பெறுவாரே** என்பதில் உள்ள 'ஏ'காரத்தைப் **பயில்வார்** என்பதுடன் கூட்டிப் **பயில்வாரே** வானுலகம் பெறுவார் எனக் கூறுதல் மிகவும் பொருத்தமானதாம்.

**ஆடை தவிர்த்தறங் காட்டும் அவர்களும் அந்துவ ராடைச்**
**சோடைகள் நன்னெறி சொல்லார் சொல்லினும் சொல்லல [கண்டீர்**
**வேடம் பலபல காட்டும் விகிர்தன்நம் வேதமு தல்வன்**
**காடத னில்நட மாடுங் கண்ணுத லான்கடம் பூரே ...10**

*10.* ஆடை உடுக்காது அறத்தினைச் சொல்பவர்கள் போலத் தங்களைக் காட்டிக் கொள்ளும் சமணர்களும்,

அழகிய காவிநிறம் ஊட்டிய உடைகளைத் தரித்த சோடைகளாகிய பௌத்தர்களும் நல்லதான ஞானநெறியினைச் சொல்லமாட்டார்கள். அவர்கள் நன்னெறி போல ஏதேனும் சொல்லினும் அவை உண்மையில் நன்னெறி கூட்டுவிக்கும் சொற்கள் ஆகா என்பதைக் கண்டுகொள்வீராக. பலபல வேடங்களைக் காட்டும் விகிர்தனாகிய நமது வேதமுதல்வன்; காடதனில் நடனமாடுகின்ற நெற்றிக் கண்ணன் ஆகிய சிவபெருமான் கோயில் கொண்ட கடம்பூரினை அடைந்து பெருமானை வழிபடுங்கள். இதுவே நன்னெறி என்று உலகர்க்கு உணர்த்தியருளினார் ஆசாரிய மூர்த்திகள் என்க.

**அறங்காட்டுமவர்கள்** — தர்மோபதேசம் செய்பவர்கள் போலத் தம்மைக் காட்டிக் கொள்ளுபவர்கள். அல்லது தாம் தரும நெறியில் நிற்பவர் போலத் தம்மைக் காட்டிக் கொள்ளுபவர்கள். புறத்தோற்றமேயன்றி உண்மையில் அவர்கள் அறநெறி நிற்பவரல்லர் எனக் கொள்க.

**சோடையர்** — வறண்டவர்கள். அதாவது பேச்சுக்களில் பொருள் ஒன்றும் இல்லாதவர். பொருளற்ற; பயனற்ற பேச்சினை "வறட்டுப் பேச்சு" எனக் கூறும் உலக வழக்கும் காண்க.

புறப்புறச் சமயிகளாகிய சமணர்களும் பவுத்தர்களும் பிறவாப்பேறு அளிக்க வல்ல உண்மையான ஞான நெறியினை உபதேசிக்க மாட்டார்கள். ஞானம் எனக் கொண்டு அவர்கள் கூறும்சில சொற்களும் ஞானமார்க்கத்துக்கு உரியன ஆகா. அஞ்ஞான நெறியில் செலுத்தும் வீண் பேச்சுக்களேயாகும். ஆகையால் அவைகளை அங்ஙனம் அறிந்து ஒதுக்கி வீடுபேறு அளிக்கவல்ல சிவஞானத்தைப் பெறுங்கள், அதற்கு வழி சிவபெருமானைத் திருக்கடம்பூரில் சென்று வழிபடுங்கள் என்று பிள்ளையார் அறிவுறுத்தியருளியது கண்டு கொள்க.

**விடைநவி லுங்கொடி யானை வெண்கொடி சேர்நெடு மாடம்**
**குடைநவி லுங்கடம் பூரிற் காதல னைக்கடற் காழி**
**நடைநவில் ஞானசம் பந்தன் நன்மையா லேத்திய பத்தும்**
**படைநவில் பாடல்ப யில்வார் பழியொடு பாவமி லாரே ...11**

*11.* எருதினைக் கொண்ட கொடியை உடையவனை' உயிர்க் கூட்டங்களால் காதலிக்கப் படவேண்டியவனாகிய சிவபிரானை, வெண்மையான கொடிகள் சேர்ந்த நெடிய மாடங்களும் இடங்களும் நிறைந்த திருக்கடம்பூரில் தரிசித்து, சீகாழியிற்றோன்றிய ஒழுக்கம் மிக்க திருஞான சம்பந்தன் நன்மை பயக்கும் சொற்களால் துதித்துப் பாடிய திருவருளைப் பெற்றுத் தரும் கருவியாக அமைந்த இப் பாடல்கள் பத்தினையும் பாடப்பயில்பவர்கள் பழியும் பாவ மும் இல்லாதவர்களாக ஆவார்கள். (புகழும் புண்ணியமும் உடையவர்கள் ஆவார்கள் என்பது இப்பதிகப் பயனாகும்).

**விடை நவிலுங் கொடி** — எருது சிவபெருமானுக்கு ஊர்தியாகமட்டுமல்லாமல் கொடியாகவும் உள்ளது.

**காதலன்**—உயிர்க்கூட்டமாகிய பெண்ணினத்துக்கு நாயகன். அன்புருவானவன்.

**நடை**—நல்லொழுக்கம்; இங்குப் பிறப்பொழுக்கத்தின் மேல் நின்றது. பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றக் கெடும் என்ற திருக்குறள் பகுதியில் வலியுறுத்தப்படும் ஒழுக்கம் எனக் கொள்க.

**படை**—கருவி; திருவருளைப் பெற்றுத்தரும் கருவி. இனிப் படை என்பதற்கு இறைவன் புகழொடு படுக்கும் பாடல் எனக் கூறினர் கோவை சிவக்கவிமணியவர்கள்.

சிவம்

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருநாரையூர்—1

**பதிக வரலாறு:** திருக்கடம்பூரில் இறைவரைக் கும்பிட்டுப் பதிகம் பாடிய பின்னர் அப்பெருமானுரை நன்மை விளங்கும் திருநாரையூரிலே வணங்கும் விருப்பத்துடன் அவ்வூர் சென்றடைந்து, மிக்க விருப்பத்துடன் கோயில் சென்று, இறைவர் திருமுன் சேர்ந்து, சிவமணம் மிக்க செந்தமிழ்மாலை பாடி நின்று, எமது பிராணுகிய கவுணியர் தலைவர் துதித்தனர். **காம்பினை வென்றமென் தோளி** எள்று தொடங்கும் இப்பதிகமும் இதற்கடுத்துக் கொடுக்கப்பட்டுள்ள **கடலுடை** எனத்தொடங்கும் திருப்பதிகமும் சேர்ந்து இச்செந்தமிழ் மாலையாம் எனக் கொள்க.

**நம்பரை நலந்திகழ் நாரை யூரினில்**
**கும்பிடும் விருப்பொடு குறுகிக் கூடிய**
**வம்பலர் செந்தமிழ் மாலை பாடிநின்று**
**எம்பிரான் கவுணியர் தலைவர் ஏத்தினர்.**

—சேக்கிழார், பெரியபுராணம்—திருஞானசம்பந்தர் புராணம்: *215*

பண்-பழம்பஞ்சுரம்] [3-ம்திருமுறை

திருச்சிற்றம்பலம்

**காம்பினை வென்றமென் தோளிபாகங் கலந்தான் நலந்தாங்கு**
**தேம்புனல் சூழ்திகழ் மாமடுவில் திருநாரை'யூர்மேய**
**பூம்புனல் சேர்புரி புன்சடையான் புலியின் னுரிதோல்மேல்**
**பாம்பினை வீக்கிய பண்டரங்கன் பாதம் பணிவோமே. ...1**

பதிகப்பொழிப்புரை:

*1.* மூங்கிலைத் தனது மென்மையினுல் வென்ற தோளை உடைய உமாதேவியாரைத் தனது ஒரு பாகத்தில் கலந்தவ

னும், நன்மைகளைத் தாங்குகின்றதும் இனிய நீர் சூழ்ந்த சிறந்த நீர்நிலைகளையுடையதுமான திருநாரையூரில் எழுந்தருளிய அழகிய கங்கையையும் முறுக்கிய சிறு சடைகளையுமுடையவனும், ஆடையாக உடுத்திய புலித்தோலின் மேல் பாம்பைக் கச்சையாகக் கட்டிய பண்டரங்கனை சிவபெருமானது திருப்பாதங்களைப் பணிவோமாக.

**மடு**—தடாகம், பொய்கை போன்ற நீர் நிலை.

**புன்சடை**— சிறுசடை; புன்மை இங்குச் சடைகளின் சிறுமை குறித்தது போலும். **பொன் சடை** என்பது **புன் சடை** என மருவியது என்ற திருத்தருமையாதீன உரைக் குறிப்பின் பொருத்தம் ஆராய்ச்சிக்குரியது.

**பண்டரங்கன்**— சிவபிரான் பாண்டரங்கம் என்ற திருக்கூத்தினை ஆடியமையாற் போந்த பெயர். இது பெருமானின் பதினொரு வகைக் கூத்தினுள் அவர் திரிபுரத்தினை அழித்த போது ஆடிய கூத்தாம்.

**பாம்பினை வீக்கிய**—ஆடுவோர் ஆடும்போது ஆடை நெகிழ்ந்து விடாது இறுகக் கட்ட வேண்டுமாதலால் ஆடைமேல் **பாம்பினை வீக்கிய** எனக் கூறினர்.

**கச்சை**— இடுப்பிற்கட்டுங் கயிறு.

**தீவினை யாயின தீர்க்கநின்றான் திருநாரை யூர்மேயான்**
**பூவினை மேவுசடை முடியான் புடைசூழப் பலபூதம்**
**ஆவினில் ஐந்துங்கொண் டாட்டுகந்தான் அடங்கார்**
**[மதில்மூன்றும்**
**ஏவினை யெய்தழித்தான் கழலே பரவா எழுவோமே. ...2**

2. (அடியார்களது) தீவினைகளைத் தீர்த்தலைக் கடனாகக் கொண்டவன், திருநாரையூரில் எழுந்தருளியவன், கொன்றை மலர் மேவிய சடை முடியினையுடையவன், பல பூதங்கள் புடைசூழப் பசுக்களினின்றும் கிடைக்கும் ஐந்து

பொருட்களால் அபிடேகஞ் செய்து கொள்ளுதலை விரும்பியவன், பகைவரது மூன்று மதில்களையும் ஒரு அம்பினை எய்து அழித்தவன், இத்தகைய பெருமானின் திருவடிகளையே துதித்து நாம் உயர்வோமாக.

**ஆவினில் ஐந்து** — பால், தயிர், நெய், கோமயம், கோசலம் எனப்படும் பசுக்களினின்றும் பெறும் ஐந்து பொருள்கள். இவை **ஆனைந்து** என்றும் **பஞ்சகவ்யம்** எனவும் வழங்கப்படும்.

**ஆட்டு** — நீராட்டு, இங்கு அபிடேகம் செய்தலைக் குறித்தது.

ஏவினை — அம்பு; **கழல்** — இங்கு வீரக்கழலை அணிந்த திருவடிகளைக் குறித்தது.

**மாயவன் சேயவன் வெள்ளியவன் விடம்சேரும் மைமிடற்றன்**
**ஆயவ னாகியொ ரந்தரமும்மவ னென்று வரையாகம்**
**தீயவன் நீரவன் பூமியவன் திருநாரை யூர்தன்னில்**
**மேயவ னைத்தொழு வாரவர்மேல் வினையாயின வீடுமே. ...3**

3. திருமால், உருத்திரன், பிரம்மதேவன், விடம் சேர்ந்த நீல நிறமுடைய கழுத்தினையுடைய மகேசுவரன் ஆகிய மூர்த்தி பேதங்களானவரும், மற்றும் ஒவ்வொரு வேறுபாடான மூர்த்திகளும் தானேயாகி, மலை போன்ற திருமேனி நெருப்பு, நீர், பூமி (உபலட்சணத்தால் சாற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், உயிர்) ஆகியவைகளாக உடையவரும், திருநாரையூரில் விரும்பி எழுந்தருளியிருப்பவருமான சிவபிரானைத் தொழுவாரது வினைகள் முழுதும் அவர்களை விட்டு ஒழியும்.

**மாயவன்**—திருமால், **சேயவன்**—செம்மை நிறமுடைய உருத்திரன், **வெள்ளியவன்**—வெள்ளைத் தாமரைப் பூவில் இருக்கும் பிரம்மதேவன். சிவபிரானே மும்மூர்த்திகளாகவும், இவற்றுடன் மகேசுவரன், சதாசிவன் என்ற இரண்டும் சேர்த்து ஐந்து மூர்த்திகளாகவும் விளங்குகின்றார் என்பதாம்.

ஓர் அந்தரமும் தானேயாகி என்றது 25 என்றும் 64 என்றும் குறிப்பிடப்படும் சிவமூர்த்தங்களைக் குறிக்கும்.

"ஒன்றாகி ஐந்தாய் ஐயைந்துருவாகி வருவாய் போற்றி" என்றார் திருவிளையாடற்புராணத்து ஆசிரியர், பரஞ்சோதி முனிவர்.

அந்தரம் — பேதம் அதாவது வேறுபாடு.

வரை ஆகம்—வரை (மலை) போன்ற மேனி. ஐம்பெரும் பூதங்களும், சந்திரன் சூரியன் என்னும் இருசுடர்களும், உயிர் ஒன்றும் சேர்ந்து எட்டும் இறைவனது திருமேனியாகி, அஷ்டமூர்த்தி என்ற திருப்பெயருடன் இறைவர் விளங்குகின்றார். இறைவனாரது அட்டமூர்த்தியாகும் தன்மையைத் திருமுறைகளில் பல இடங்களில் காணலாம்.

வினையாயின வீடுமே — முற்பிறப்பிற்செய்த வினை முற்றும் ஒழியும். இப்பிறப்பில் ஈட்டிய வினையும், இனியெடுக்கும் பிறவிக்குக் காரணமாய் நின்ற வினையும் யாவும் ஒழியும் என்பதாம். வினை முற்றிலும் ஒழியவே பிறப்பிலர் ஆவர் என்று கொள்க.

துஞ்சிரு ளாடுவர் தூமுறுவல் துளங்கும் உடம்பினராய்
அஞ்சுட ரார்எரி யாடுவர் ஆரழலார் விழிக்கண்
நஞ்சுமிழ் நாகம் அரைக்கசைப்பர் நலனோங்கு நாரையூர்
எஞ்சிவ னார்க்கடி மைப்படுவார்க் கினியில்லை யேதமே. .. 4

4. அனைத்தும் ஒடுங்குகின்ற இரவுக் காலத்திலே ஆடுவார். அழகிய புன்சிரிப்போடு அசையும் உடம்பினராய் அழகிய ஒளி பொருந்திய தீயின்கண் நின்று ஆடுவார். விழியினிடத்து நெருப்பினையுடையவர். நஞ்சினைக் கக்குகின்ற பாம்பினை அரைக்கச்சையாகத் தரிப்பவர். நன்மைகள் ஓங்குகின்ற திருநாரையூரில் கோவில் கொண்ட எமது சிவபெருமானாராகிய இவர்க்கு அடித்தொண்டராவார்க்கு இனி எந்நாளும் துன்பம் என்பதே இல்லை.

துஞ்சிருள் — உலகனைத்தும் ஒடுங்குகின்ற மஹா சங்கார காலத்தினைக் குறித்து நின்றது.

ஆர் அழலார் விழிக்கண் — விழிக்கண் ஆர் அழலார் என மாற்றிப் பொருள் கொள்க.

நலனோங்கு நாரையூர் — முதல் திருப்பாடலில் நலன் தங்கு எனக் கூறியதை அடுத்து இப்பாடலில் நலன் ஓங்கு எனக் கூறினார். இரண்டும் வினைத்தொகையாய் முக்காலத்துக்கும் பொதுவாய் நின்று, பிள்ளையாரது அருள்வாக்கின் பயனாகப் பின்னர் திருமுறைகளைக் கண்டெடுத்துத் தொகுத்தும், திருத்தொண்டர் திருவந்தாதி பாடியும் சைவவுலகுக்குப் பேருபகாரம் செய்த, பொல்லாப் பிள்ளையார் திருவருள் பெற்ற, நம்பியாண்டார் நம்பிகளின் திருவவதாரத்தால் உண்மையிலேயே நலனோங்கியதாக ஆயிற்று.

சேக்கிழார் பெருமானின் தெய்வவாக்கிலும் நலந்திகழ் நாரையூர் எனவே வந்துள்ளது காண்க. பின்னரும் இப்பதிகத்தில் 7-வது திருப்பாடலில் நன்னலனோங்கு திருநாரையூர் என்றும் 8-வது திருப்பாடலில் மீண்டும் நலனோங்கு திருநாரையூர் என்றும் அருளிச் செய்திருத்தல் இப்பதியின் சிறப்பை மேலும் உறுதிப்படுத்துவதாகும்.

ஏதம் — குற்றம்; இங்கு துன்பம் என்ற பொருளில் வந்தது.

**பொங்கிளங் கொன்றையினர் கடலில் விடமுண்**
**[டிமையோர்கள்**
**தங்களை ஆரிடர் தீரநின்ற தலைவர் சடைமேலோர்**
**திங்களை வைத்தநல் ஆடலினர் திருநாரை யூர்மேய**
**வெங்கனல் வெண்ணீ றணியவல்லார் அவரே விழுமியரே. 5**

5. செழித்து வளர்ந்த இளங்கொன்றையின் புதிய மலரை அணிந்தவர், கடலில் தோன்றிய நஞ்சைத் தாம்

உண்டு இமையோர்களைப் பிணித்த துன்பம் நீங்கும்படி நின்ற தலைவர். தனது சடைமுடிமேல் பிறைச்சந்திரனை வைத்த நல்ல திருவிளையாடலை உடையவர். திருநாரையூரில் எழுந்தருளியுள்ள வெம்மையான கனல் வடிவமான இறைவர். (இவரது அருட்பிரசாதமாகிய) வெண்ணீற்றினை அணிய வல்லவர்களாகிய அவர்களே (அந்த மெய்யடியார்களே) எல்லோரினும் மேம்பட்டவர்களாக ஆவார்கள். (மற்ற எத்தகைய மேன்மைகள் இருப்பினும் வெண்ணீறு அணிகிலாதார் மேன்மக்களாகமாட்டார்கள். வெண்ணீறணிபவர்களே மேன்மக்கள் என்று அருளியதாமெனக் கொள்க.)

கனல் — தீ, இறைவரது எட்டு மூர்த்தங்களுள் ஒன்று. பின்னரும் 8-வது திருப்பாடலில் தழலாய சங்கரனே என்று அருளிச் செய்திருத்தலும் காண்க.

வெங்கனல் வெண்ணீறு அணியவல்லார் என்பதை இறைவர்க்கேயாக்கி அவரே மற்ற எல்லாக் கடவுளர்க்கும் மேலாய கடவுள் எனப்பொருள் கொள்ளினும் அமையும். இங்ஙனங் கொள்ளுமிடத்து வெங்கனலால் நீருக்கப்பட்ட வெண்ணீற்றினை அணியவல்ல பெருமான் எனப் பொருள் கொள்க. இக்கருத்தினையே இத்தலத்து அருளிச் செய்த மற்றொரு திருப்பதிகத்தில் உடலிடையிற் பொடி பூசவல்லான் என அருளியிருத்தல் காண்க.

விழுமியர் — மேலானவர்.

பாருறு வாய்மையினர் பரவும் பரமேட்டி பைங்கொன்றைத்
தாருறு மார்புடையான் மலையின் தலைவன் மலைமகளைச்
சீருறு மாமறுகிற் சிறைவண் டறையுந் திருநாரை
யூருறை எம்மிறைவர்க் கிவை யொன்றொடொன் றொவ்வாவே
—6

6. நிலவுலகம் முழுவதும் (புகழ்) பரவுதலையுடைய வாய்மையுடைவர்கள் துதிக்கின்ற மேலான கடவுள். பசுங்

கொன்றை மாலைகள் அணிந்த மார்பினையுடையவர். திருக் கயிலாய மலையின் தலைவர். உமாதேவியாரைச் சிறப்புடன் தழுவியிருக்கும் (இறைவர்). பெருமையுடைய வீதிகளில் சிறைவண்டுகள் ஒலிக்கின்ற திருநாரையூரில் உறைகின்ற (இத்தகைய பெருமைகள் வாய்ந்த) எம் இறைவர்க்கு இவை ஒன்றோடு ஒன்று ஒவ்வாவாம்.

வாய்மை — சத்தியம், வேதவாய்மை அல்லது சைவ சீலத்தைக் குறித்ததாகவும் கொள்க.

பரமேட்டி — பரம+இஷ்டி; மேலான கடவுள் அல்லது மேலான யாகசொரூபமாய் இருப்பவர்.

மலைமகளைச் சேருறும் — மலைமகளைச் சேருடன் உறும். அதாவது சிறப்புடன் தழுவியிருக்கும் என்றதாம்.

இவ்வருமைத் திருப்பாடலில் இறைவர்க்கு இவை ஒன் றோடொன்று ஒவ்வா எனக் கூறியதில், இவை என்பது அவர் வாய்மையினால் பரவப் படுதலும் பரமேட்டியாதலும் போன்ற சிந்தனைக்கரிய தன்மையும், மலையின் தலைவனாதல், மலைமகளைப் பாகம் வைத்தல் முதலிய சிந்தனைக்கெட்டும் தன்மையும் ஆம். இவற்றை முறையே அசிந்திதன் என்றும் சிந்திதன் என்றும் கூறுவர்.

**கள்ளி இடுதலை ஏந்துகையர் கரிகாடர் கண்ணுதலர்**
**வெள்ளிய கோவண ஆடைதன்மேல் மிளிரா டரவார்த்து**
**நள்ளிருள் நட்டம தாடுவர் நன்னலனோங்கு நாரையூர்**
**உள்ளிய போழ்தி லெம்மேல்வரு வல்வினையாயின ஓடுமே ...7**

7. கள்ளிச்செடிகள் நிறைந்த முதுகாட்டில் இடப்பட்ட தலையினை ஏந்துகின்ற கையினையுடையவர். கரிகின்ற காட்டி னைத் தமது இருப்பிடமாகக் கொண்டவர். நெற்றியில் கண் ணுடையவர். வெண்மையான கோவண ஆடையின்மேல் விளங்குகின்ற ஆடும் அரவினைக் கச்சையாகக் கொண்டு நள்ளிருளிலே நடனமாடுவர். நல்லனவான நலன்களெல்லாம்

ஓங்குகின்ற திருநாரையூரில் கோயில்கொண்ட இப்பெருமானை நினைத்த மாத்திரத்திலேயே எம்மேல் வருகின்ற வலிய வினைகள் ஆயினயாவும் ஓடிவிடும்.

இவ்வாறன்றி, இப்பெருமைகள் கொண்ட இறைவனார் உறைகின்ற நல்ல நலன்கள் ஓங்கி வளர்கின்ற திருநாரையூரினை நினைத்த மாத்திரத்தில் வல்வினையாயின யாவும் ஓடும் என்று திருநாரையூர்த் தல மஹிமையைக் கூறியருளியதாகக் கொள்வதும் பொருந்தும்.

**நாமமெ னப்பல வும்முடையான் நலனோங்கு நாரையூர்**
**தாமொம் மெனப்பறை யாழ்குழல் தாளார் கழல்பயில**
**ஈமவி ளக்கெரி சூழ்சுடலை யியம்பும் மிடுகாட்டில்**
**சாமமு ரைக்கநின் றாடுவானுந் தழலாய சங்கரனே. ...8**

8. பெயர்கள் பலவற்றைத் தமது நாமமாக உடையவர், நன்மைகள் சிறந்து ஓங்குகின்ற திருநாரையூரில் தாம், ஓம் என ஒலிக்கும் முழவோசைகள், யாழ், குழல் இவற்றின் ஒலி ஆகியவற்றோடு திருத்தாள்களில் பொருந்திய கழல்களும் ஒத்து ஒலிக்கக் கொள்ளியே விளக்காக எரிகின்ற இடுகாட்டில் சாமகானம் ஒலிக்க நின்றாடுகின்ற பெருமானும் அக்னியே சொரூபமான சங்கரனேயாவர்.

நாமமெனப்பலவுமுடையான்—உலகனைத்தும் இறைவனேயாதலின் உலகிலுள்ள பெயர்களனைத்தும் அவனுடைய பெயர்களேயாயின என்க.

ஐந்தாவது திருப்பாடலில் வெங்கனல் என்று இறைவரைக் கூறியதற்கேற்ப இப்பாடலில் தழலாய சங்கரன் எனப் போற்றியருளினார்.

சுடலை ஒரு நாடக அரங்கமானால் அங்கு எரியும் ஈம எரியே அந்நாடக அரங்கிற்கு ஏற்றிய விளக்காகவும், அச்சுடலையில் உண்டாகும் ஓசையினையே சாமகான ஒலியாகவும்

கொண்டு இறைவர் ஆடுகிறார் என்பது இப்பாடலில் கூறிய கருத்தாகும். இங்ஙனம் ஆடுபவன் நழலாய சங்கரன் என்பதாம்.

நாம், ஓம் — இவை பறைபோன்ற வாத்தியங்களின் ஒலிக் குறிப்புக்கள். இவ்வொலிகட்கு ஒத்து இறைவரது கால்களில் கட்டிய கழல்கள் ஒலிக்கின்றன என்பதாம்.

**ஊனுடைவெண் தலைகொண் டுழல்வா ளொளிர்புன் சடை [மேலோர்**
**வானிடைவெண் மதிவைத் துகந்தான் வரிவண் டியாழ்முரலத்**
**தேனுடைமா மலரன்னம் வைகுந் திருநாரை யூர்மேய**
**ஆனிடையைந் துகந்தான் அடியே பரவா வடைவோமே. ...9**

9. ஊனினையுடைய வெண்தலையைப் பிச்சைப் பாத்திரமாகக் கொண்டு திரிபவர். ஒளிர்கின்ற மெல்லிய சடைமேல் ஆகாயத்தில் தவழுகின்ற வெண்மையான சந்திரனை வைத்து மகிழ்ந்தவர். வரிவண்டுகள் யாழ்போல் ஒலிக்கத் தேன் உடைய சிறந்த தாமரை மலர்களின் மேல் அன்னங்கள் துயிலுகின்ற திருநாரையூரில் எழுந்தருளிய ஆனிடை ஐந்து உகந்தவர். இத்தகைய சிவபிரானது திருவடிகளையே பரவித் துதித்துப் பற்றுக்கோடாக அடைவோமாக.

**உகந்தான்** — உகப்பு என்னும் சொல் உயர்தல் என்றும் பொருள்படுமாதலால் மற்றக் கடவுளர் எவரும் செய்தற்கரிய, செய்யத் தயங்கிய செயலான பிறைச்சந்திரனைத் தலையில் வைத்துக் கொள்ளலைச் செய்தமையால் மிகவும் உயர்ந்தவராயினார் என்றும் கொள்ள நின்றது. (வெண்மதி அணிந்த புராண வரலாறு, 2-வது தமிழ்மாலை பக்கம் 72 முதல் 74 வரையில் காண்க.)

குழந்தைகள் தாய்மார்களின் பாடல் ஒலிகேட்டுத் துயில்வது போல அன்னங்கள் தாமரைமலராகிய தொட்டில்களில், வண்டினங்கள் யாழொலிபோலப் பாட, அவ்வொலி

கேட்டு உறங்கும் திருநாரையூர் என்று ஊர்ச் சிறப்பு கூறினர்.

**ஆனிடை ஐந்து** — முன் இரண்டாவது திருப்பாடலில் உரைத்தவை காண்க.

**தூசுபுனை துவராடை மேவுந் தொழிலா ருடம்பினிலுள்**
**மாசுபுனைந் துடைநீத் தவர்கள் மயல்நீர்மை கேளாதே**
**தேசுடை யீர்கள்தெளிந் தடைமின் திருநாரை யூர்தன்னில்**
**பூசுபொடித் தலைவ ரடியார் அடியே பொருத்தமே. ...10**

*10.* ஆடையாகக் காவியாடைகளை உடுக்கும் பௌத்தர்களும், உடம்பினிலும் உள்ளத்திலும் அழுக்கினைக் கொண்டு ஆடை உடுத்தலை ஒழித்தவர்களாகிய சமணர்களுமாகிய இவர்களது மயக்கும் தன்மையுடைய மொழிகளைக் கேளாது, தேசுடையவர்களே! உண்மையை நன்கு ஆராய்ந்து தெளிந்து திருநாரையூரில் திருநீறு பூசிய தலைவராகிய சிவபெருமானது திருவடிகளையும், அவரது அடியார்களது திருவடிகளையுமே பொருத்தமாகும் எனக்கொண்டு அவற்றையே சரணுக அடையுங்கள்.

**தூசு** — ஆடை, **புனை** — உடுக்கின்ற

**உடம்பினுள் மாசு புனைந்து** — உடம்பினில் மாசு, உள் மாசு என இருவகையிலும் கூட்டி உடலிலும், உள்ளத்திலேயும் முறையே அழுக்கையும், அறியாமையையும் அணிகலமாகப் புனைந்து கொண்டவர்கள் என உரைத்துக் கொள்க. நீராடாமையால் உடல் மாசும், உண்மை நெறியறியாமையால் உள்மாசும் கொண்டவர்கள் என்பது கருத்து.

**மயல் நீர்மை** — மயக்கும் தன்மை. இங்கு அத்தன்மையுடைய போலி உபதேசங்களைக் குறித்து நின்றது.

**தேசுடையீர்** — அறிவுள்ளவர்களே! என்று உலகத்தவரை விளிக்கும் சொல்.

தெளிந்து—ஆராய்ந்து சிவனே முழுமுதற் பொருள் என நிச்சயித்து. (சமணரது போலி உபதேசங்களால் குழம்பினும் பின்னர் திருஞானசம்பந்தரது உண்மை வார்த்தைகளால் அக்குழப்பத்தினின்றும் தெளிந்து எனக் கொள்க.

தலைவரடியார் அடியே—தலைவரது அடி, அவர் அடியாரது அடி என ஈரிடத்தும் கூட்டிப் பொருள் கொள்க.

**தண்மதி தாழ்பொழில்சூழ் புகலித் தமிழ்ஞான சம்பந்தன்**
**ஒண்மதி சேர்சடையா னுறையுந் திருநாரை யூர்தன்மேல்**
**பண்மதி யாற்சொன்ன பாடல்பத்தும் பயின்றார் வினைபோகி**
**மண்மதி யாதுபோய் வான்புகுவர் வானோ ரெதிர்கொளவே.**
**...11**

திருச்சிற்றம்பலம்

*11.* குளிர்ச்சி பொருந்திய சந்திரன் தங்குகின்ற சோலைகள் சூழ்ந்த புகலியென்னும் சீகாழியில் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன், ஒளி பொருந்திய சந்திரன் அடைந்த சடையினையுடைய சிவபெருமான் உறைகின்ற திருநாரையூர் மேல் இசையறிவுடன் பாடிய இப்பாடல்கள் பத்தினையும் பயின்று ஓதுபவர்கள், தமது வினைகளெல்லாம் நீங்கப் பெற்று, மண்ணுலக வாழ்வைப் பெரிதாக மதித்து மயங்காது நீங்கி,வானவர்கள் எதிர்கொள்ள வானுலகம் சென்றடைவர். வினைகள் நீங்குதல் இப்பதிகப் பயன் எனக் கூறியதாம்.

சிவம்



உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருநாரையூர்—2

பதிக வரலாறு: திருநாரையூர் — 1ல் உரைத்தவை காண்க.

பண்—பழம்பஞ்சுரம்] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

**கடலிடை வெங்கடு நஞ்சமுண்ட கடவுள் விடையேறி**
**உடலிடை யிற்பொடிப் பூசவல்லா னுமையோ டொருபாகன்**
**அடலிடை யிற்சிலை தாங்கியெய்த அம்மான் அடியார்மேல்**
**நடலைவி னைத்தொகை தீர்த்துகந்தா னிடநாரை யூர்தானே.**

...1

**பதிகப் பொழிப்புரை:**

1. கடலில் தோன்றிய கொடிய நஞ்சினை உண்ட கடவுள், எருதின் மீது ஏறுபவர், உடம்பில் திருநீறு பூச வல்லவர், உமாதேவியாரோடு ஒரு பாகமாக இருப்பவர், போரிடும் சமயத்தில் (மேருமலையாகிய) வில்லினைத் தாங்கிக் கணை எய்த பெருமான், தன்னுடைய அடியார்களின் மேல் வரும் துன்பந்தரும் வினைக்கூட்டங்களைத் தீர்த்து மகிழ்ந் தவர். (இத்தகைய) சிவபிரான் கோயில் கொண்ட இடம் திருநாரையூராகும்.

**வெங்கடுநஞ்சம்** — நஞ்சின் கொடுமையைக் குறிக்க இவ்வாறு கூறினூர். **கடு** என்ற சொல்வே நஞ்சு எனப் பொருள்படும். விடம் என்ற பொருள்படும் **ஆலம்** என்ற சொல் இருமுறை அடுக்கி **ஆலாலம்** என வருதல் போலக் **கடு நஞ்சு** எனக் கூறினர் போலும்.

**பொடி பூச வல்லான்** — 'சுடலைப் பொடி பூசி' என்று முன்னரும் கூறியருளியது காண்க. (தோடுடைய செவியன்

எனத் தொடங்கும் முதல் திருப்பதிகம்) பொடி பூசுதல் ஸர்வ சங்காரத்து நிகழ்ச்சியைக் கூறுதலால் இறைவனது 'சங்காரம்' என்ற தொழில் விளக்கப்படுகிறது. அனைத்தை யும் சங்கரிக்கும் வல்லமை சிவபிரானுக்கே உண்மையால் வல்லான் எனக் கூறியருளினர் எனக் கொள்க.

இனி, நீறணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும் எழில் உடைமையால் அக்கோலம் தொழுவாரது உள்ளத்து நீங் காது நிற்றலால் ஆண்டுள்ள வினை நீறு ஆம் என்ற திருக் கோவையார் 118 வது செய்யுளில் பேராசிரியர் கூறியுள்ளபடி நான் பொடிப் பூசி, தொழுவார் வினைகளை நீறு ஆக்க வல்ல வன் என்று கூறுதலும் பொருந்தும். வினைத்தொகை தீர்த் துகந்நான் என்று இப்பாடலிலேயே வருதலும் காண்க.

அடலிடை — முப்புரத்தாரோடு போரிட்ட சமயத்தில்

அம்மான் — சிவபிரான். பெருமகன் என்பது பெருமான் என்றுனது போல அருமகன் அம்மான் என வந்தது. அரிய கடவுள் என்பது பொருள்.

நடலை — துன்பம்; மற்றும் பொய், வஞ்சனை, அசைவு, நடுக்கம் என்பனவாகிய பொருள்களும் உள.

விண்ணணின்மின் னேர்மதி துத்திநாகம் விரிபூ மலர்க்கொன்றை
பெண்ணணின்முன் னேமிக வைத்துகந்த பெருமான் எரியாடி
நண்ணிய தன்னடி யார்களொடுந் திருநாரை யூரானென்று
எண்ணுமின் நும்வினை போகும்வண்ண மிறைஞ்சுந் நிறை
[வாமே 2

2. ஆகாயத்தில் மின்னலையொத்த ஒளியுடைய சந்தி ரனையும், படப்புள்ளிகளையுடைய பாம்பினையும், விரிந்த கொன்றைமலரையும் கங்காதேவிக்கு முன்னே சடையில் தரித்து மிகவும் மகிழ்ந்த பெருமான், எரியினை ஏந்தி ஆடு பவன், தன்னைச் சேர்ந்த அடியார்களோடு திருநாரையூரில்

எழுந்தருளியிருப்பவன் என்று எண்ணுங்கள். உங்களது வினைகள் தொலைந்து போகும் வண்ணம் வணங்குங்கள். அதனால் இன்ப நிறைவு உண்டாகும்.

இறைவனது பெருமைகளை எண்ணி இறைஞ்சினால் துன்பங்கள் தொலைந்து குறைவிலா இன்பம் உண்டாகும் என்பதாம்.

இறைஞ்சும் — வணங்குங்கள். (பன்மை ஏவல் வினை முற்றாக வந்தது.)

**தோடொரு காதொரு காதுசேர்ந்த குழையான் இழை**
**[தோன்றும்**
**பீடொரு கால்பிரி யாதுநின்ற பிறையான் மறையோதி**
**நாடொரு காலமுஞ் சேரநின்ற திருநாரை யூரானைப்**
**பாடுமின் நீர்பழி போகும்வண்ணம் பயிலு முயர்வாமே. ...3**

3. இடக்காதில் தோடும் வலக்காதில் குழையும் அணிந்தவன். மார்பிலே பூணூல் தோன்றுகின்ற பெருமை ஒரு காலத்திலும் நீங்காது நிலைத்து நின்ற, பிறைச்சந்திரனை அணிந்த பெருமான். வேதங்களை ஓதிக்கொண்டு ஒவ்வொரு காலத்திலும் நாட்டிலுள்ள அடியார்கள் வணங்குதற்கு வந்து சேரும்படி எழுந்தருளியவனான திருநாரையூர்ப் பெருமானைப் பாடுவீர்களாக. உங்களது பழிகள் போகும் வண்ணம் இடைவிடாது வணங்குங்கள். உங்களுக்கு உயர்வு உண்டாகும்.

பொதுவாக ஒரு காது எனக் கூறினாரேனும் தோடு என்றதால் அம்மைபாகமாகிய இடக்காதும், குழை என்றதால் இறை பாகமாகிய வலக்காதும் கொள்ளப்பட்டது.

அம்மையப்பனாய்ப் பூணூல் விளங்க அந்தணனாய்த் தோன்றும் பெருமை என்றும் நீங்காது நிலைத்து நின்றவன், பிறை சூடியவன் எனக் கொள்க.

இழை — பஞ்சின் நூல்; இங்கு இழைகளை முறுக்கிச் செய்யப்பட்ட பூணூல் எனக் கொள்ளப்பட்டது.

"இழை வளர் ஆகத்து ஞானசம்பந்தன்" (11-ம் திரு முறை, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி-48 வது பாடல்) என்று நம்பியாண்டார் நம்பிகளும் இழை என்ற சொல்லைப் பூணூல் என்ற பொருளில் அமைத்துள்ளார்.

இனி, இழை என்பதற்கு ஆபரணங்கள் என்று கொள்ளின் அம்மைபாகத்து அணிகலன்களைக் குறிக்கும்.

பயிலுதல் — ஒரு காரியத்தை இடைவிடாது செய்தல். இங்கு இடைவிடாது வணங்குதல் மேல் நின்றது.

வெண்ணில வஞ்சடை சேரவைத்து விளங்குந் தலையேந்திப்
பெண்ணில மர்ந்தொரு கூறதாய பெருமா னருளார்ந்த
அண்ணல் மன்னியுறை கோயிலாகு மணிநாரை யூர்தன்னை
நண்ணல மர்ந்துறை வாக்குமின்கள் நடலை கரிசறுமே. ...4

4. வெண்மையான நிலவினைச் சடைமேல் பொருந்த வைத்து, விளங்குகின்ற தலையோட்டினைக் கையிலேந்தி, பெண்ணை விரும்பி ஒரு பாகமாகக் கொண்ட பெருமானும், அருள் நிறைந்த தலைவனுமாகிய சிவபிரான் நிலைத்து வாசஞ் செய்கின்ற கோயிலாகிய அழகிய திருநாரையூரினைச் சென்று சேர்தலை விரும்பி உறுதியாக்குங்கள். உங்களது துன்பங் களாகிய குற்றங்கள் நீங்கிவிடும்.

உறைவு ஆக்குமின்கள் — உறுதியாக்குங்கள்.

உறைவு— உறைவிடம் என்று கொள்ளுதலுமாம்.

வானமர் தீவளி நீர்நிலனாய் வழங்கும் பழியாகும்
ஊனமர் இன்னுயிர் தீங்குகுற்ற முறைவால் பிறிதின்றி
நானம ரும்பொரு ளாகிநின்றான் திருநாரை யூரெந்தை
கோனவ னைக்குறு கக்குறுகா கொடுவல் வினைதானே. ...5

5. ஆகாயமும், அதனுள் அடங்கும் தீ, காற்று, நீர், நிலம் ஆகிய ஐம்பூதங்களுடன் சேர்ந்ததாகிப் பழிக்கு இடமாகிய தசையாகிய உடம்பில் தங்குகின்ற இனிய உயிர் தீமை பயப்பதாகிய குற்றங்கட்கு இடமாயிருத்தலால், (அக்குற்றங்களினின்றும் உய்தி பெறும் வழி) பிறிது ஒன்று இல்லாமையால் அடியேன் விரும்பிச் சார்தற்குப் பற்றுக் கோடாகிய பொருளாகி நின்ற பெருமான் (அவனே) திருநாரையூர் கோயில்கொண்ட எனது தந்தையும் தலைவனுமானவன். அவனைச் சென்று சரணடைய வலியவினைகள் நம்மை வந்து அடையமாட்டா.

ஐம்பூதச் சேர்க்கையாலாகிய உடற்கூட்டில் தங்கும் உயிர் தீமைகட்குக் காரணமாகிய பாவத்துக்கு இடமாகிறது. அதனின்றும் நீங்கி நன்மை பெறும் வழி இறைவனைச் சரணடைதலேயாகும். எனவே திருநாரையூர் எந்தை கோனாகிய அவனைச் சரணடையுங்கள் என்று உலகர்க்கு உபதேசித்தருளினார் திருஞானசம்பந்தர் என்று கொள்க.

**வான்** — ஆகாயம், **வளி** — காற்று

**பழியாகும் ஊன்** — பழிக்கு இடமாகிய உடல்.

**அமர்** — இச்சொல் மூன்று அடிகளிலும் முறையே அடங்குதல், தங்குதல், விரும்புதல் என்ற பொருள்களில் வந்தது.

**நான்** — அடியவனாகிய யான்.

**பொருள் ஆகி நின்றான்** — பற்றுக்கோடாகிய பொருள் ஆகி நின்றவன்.

**எந்தை** — என் தந்தை **கோன்** — தலைவன்

தந்தையும் தலைவனும் இறைவனேயாவார் என்றருளிய வாறு.

**வல்வினை** — தீமைகளும் அவற்றின் காரணமாகிய பாவமும், அவற்றிற்கு ஏதுவாகிய வலிய கன்மமலங்களும். (இது திருத்தருமபுர ஆதீனக்குறிப்புரையிற்கண்டது.)

**கொக்கிற குங்குளிர் சென்னிமத்தம் குலாய மலர்சூடி**
**அக்கர வோடரை யார்த்துகந்த அழகன் குழகாக**
**நக்கம ருந்திரு மேனியாளன் திருநாரை யூர்மேவிப்**
**புக்கம ரும்மனத் தோர்கடம்மைப் புணரும் புகல்தானே. ...6**

6. தலையில் கொக்கிறகும், குளிர்ந்த பொன்னூமத்தையின் செழித்த மலரும் சூடி, அக்கு மாலையோடு பாம்பினை இடுப்பினில் கட்டி விரும்பிய அழகினையுடையவனும், இளமைக் கோலத்துடன் ஆடையற்ற தன்மையை விரும்பிய திருமேனியினை உடையவனுமான சிவபெருமானது திருநாரையூரினைப் போயடைந்து, அதனை விரும்பும் மனத்தினையுடையவர்களை இறைவன் திருவருளாகிய புகல் தானாக வந்து கூடும்.

**கொக்கிறகு** — கொக்கின் இறகு; கொக்கின் வடிவம் கொண்ட ஓர் அசுரனைக் கொன்று அதன் அடையாளமாக அக்கொக்கின் இறகினை இறைவனார் சூடிக் கொண்டார் என்பதாக ஓர் வரலாறு உண்டு.

**ஏங்கி அமரர் இரிந்தோட வேதுரந்த**
**ஓங்கு குரண்டத்து உருக்கொண்ட தானவனைத்**
**தீங்கு பெறக்கடிந்து சின்னமா ஓர்சிறையை**
**வாங்கி அணிந்தஅருள் இங்கென்பால் வைத்திலையே.**

(குரண்டம் — கொக்கு, தானவன் — அசுரன்)

என்ற கந்தபுராணம் மஹேந்திரகாண்டம் சயந்தன் புலம்புறு படலத்துச் செய்யுள் இவ்வரலாற்றை உறுதி செய்கின்றது.

"தேவர்களை வருத்திய கொக்குருவங்கொண்ட அசுரனை வதைத்து அதன் சின்னமாக ஓர் இறகினை வாங்கியணிந்து

கொண்ட திருவருளை அடியேன் பால் வைக்கவில்லையே'' என்று சூரபத்மனால் சிறையில் அடைக்கப்பட்ட இந்திர குமாரனான சயந்தன் புலம்புவதாக அமைந்த பாடல் இது.

இனி, கொக்கிறகு என்பது கொக்கின் இறகு போன்ற வெண்மை நிறங்கொண்ட இதழ்களையுடைய ஒரு மலர் என்றும், அது மந்தாரை வகைகளில் ஒன்று என்றும், கொக்குமந்தாரை, கொக்கரை என்றெல்லாம் வழங்கப் படும் என்றும் கூறப்படுதலால் கொக்குமந்தாரை மலர் எனப் பொருள் கொள்ளினும் அமையும். பொன்னூமத்தம் மலருடன் இணைத்துக் கூறப்பட்டபடியால் கொக்கின் இறகு என்று கொள்வதை விட மலராகிய கொக்கிறகு என்ற கொக்குமந்தாரை எனக் கொள்வதே மிகச்சிறந்தது எனவே கருதுகிறோம்.

அக்கரவோடு அரை ஆர்த்து— அரவோடு என்பதில் உள்ள 'ஒடு' என்ற சொல்லை அக்கு என்பதுடன் சேர்த்து அக்கினோடு அரவு அரை ஆர்த்து எனப் பொருள் கொள்க.

அக்கு—எலும்பு மாலை, உருத்திராட்ச மாலையுமாம்.

குழகு—இளமை; நக்கு — நக்கம் என்பதன் கடைக் குறை. ஆடை யற்ற நிலையைக் குறிக்கும்.

நக்னம் — இந்த வடசொல் தமிழில் நக்கம் என வந்தது. இளமைப் பருவத்துடன் ஆடையற்றவனாய்க் கோலம் கொண்டது தாருக வனத்தில் இரவலராய்ப் பிர வேசித்த போது என்பதைக் கந்த புராணம் தட்ச காண்டத் தில் ததீசி உத்தரப்படலத்தில் காணலாம்.

புகல் — தஞ்சம்; இங்கு இறைவரது திருவருளைக் குறித்தது. புணரும் — கூடும் அதாவது தானாகவே வந்து சேரும் என்பதாம்.

புகல்—என்ற சொல்லுக்கு வெற்றி என்ற பொருளும் காணப்படுதலால் வெற்றி வந்து சேரும் என்று கொள்ளினும் இழுக்காகாது.

**ஊழியு மின்பமுங் காலமாகி உயருந் தவமாகி**
**ஏழிசை யின்பொருள் வாழும்வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி**
**நாழிகை யும்பல ஞாயிருகிகுளிர் நாரை யூர்தன்னில்**
**வாழியர் மேதகு மைந்தர்செய்யும் வகையின் விளைவாமே. ...7**

7. ஊழிக் காலமும், இன்பமும், காலங்களாகவும் ஆகி, உயர்ந்த தவமாகவும் ஆகி, ஏழிசையின் பயனாகி, உலக வாழ்க்கையில் நிகழும் வினைகளின் சேர்க்கையாகி, நாழிகை முதலிய சிறுகாலங்களின் அளவுகளாகிப், பல தினங்களுமாகி இருக்கும் இவைகளெல்லாம் குளிர்ச்சி பொருந்திய திரு நாரையூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானார் செய்யும் அருள் திருவிளையாடல்களின் விளைவுகளேயாகும் என்றவாறு.

ஊழி—பெருங்கால எல்லை. பிரளய காலம் எனப்படும். காலம்—பெருங்கால எல்லைக்கு உட்பட்ட கால எல்லைகளைக் குறிக்கும்.

வாழும் வாழ்க்கை—மக்களின் அன்றாட உலக வாழ்க்கை.

நாழிகை— மிகச்சிறிய கால எல்லையைக் குறிக்கும்.

பல ஞாயிறு—சூரியன் எனப் பொருள்படும் இச்சொல் இங்கு தினங்கள் என்ற பொருளில் வந்தது.

மிகச்சிறிய கால அளவை முதல் பெருங்கால எல்லை யாகிய ஊழியும், அதனுட்பட்ட அனைத்துக் காரியங்களும் இறைவருடைய அருள் விளையாட்டுகளின் விளைவுகளே யாகும் என்றதாம்.

**கூசமிலா தரக்கன் வரையைக் குலுங்க எடுத்தான்தோள்**
**நாசம தாகி இறவடர்த்த விரலான் கரவாதார்**

**பேசவி யப்பொடு பேணநின்ற பெரியோன் இடம்போலும்**
**தேசமு றப்புகழ் செம்மை பெற்ற திருநாரை யூர்தானே. ...8**

8. கூசுதல் இலாது திருக்கயிலாய மலையை எடுத்த இராவணனது தோள்கள் நாசமாகும்படி ஒழிய அடர்த்த திரு விரலினையுடையவன். நெஞ்சில் வஞ்சமில்லாமல் உண்மை யடியார்கள் மிகவும் வியப்போடு பேசும்படியும் பேணும் படியும் நின்ற பெருமையினையுடையவன். இத்தகைய சிவ பிரானது இடம் தேசம் முழுமையும் புகழுகின்ற சிறப்புப் பெற்ற திருநாரையூராகும்.

கூசம் கூசுதல், நாணுதல். அச்சம் அடைதல் என்ற பொருளும் உண்டு.

கரவாதார்—வஞ்சனையற்ற மெய்யடியார்களை.

கரவு — வஞ்சனை. 'கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரி யானை' என்று அப்பரடிகளும் அருளிச் செய்துள்ளார்கள். (திருக்கச்சியேகம்பத்தில் அருளியது, 4-ம் திருமுறை) எனவே கரவாதார்க்கு அவன் எளியனாதல் தேற்றம்.

பேசுதல்— புகழ்களை விரித்தல்; பேணுதல்-இடைவிடாது தியானித்தல். 'பேணலால் எம்மைப் பெற்றார்' என்ற சேக் கிழார் பெருமானின் தெய்வவாக்குங் காண்க. (பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம் 'பெருமையால் தம்மை ஒப்பார்' எனத்தொடங்கும் அருமைத் திருப்பாடல்).

பெரியோன்—பிறவா யாக்கைப் பெரியோன் எனச் சிலப் பதிகாரமும் கூறும். பெருமையுடையவன், உயர்ந்தவன் என்பதாம்.

செம்மை— செவ்விதாம் தன்மை, சிவத்தன்மை.

**பூமக னும்மவ னைப்பயந்த புயலார் நிறத்தானும்**
**ஆமள வுந்திரிந் தேத்திக்காண்ட லறிதற் கரியானூர்**

**பாமரு வுங்குணத் தோர்களீண்டிப் பலவும் பணிசெய்யும்**
**தேமரு வுந்திகழ் சோலைசூழ்ந்த திருநாரை யூர்தானே. ...9**

9. பிரமதேவனும், அவனைப் பெற்றவனாகிய மேகம் போன்ற நிறத்தையுடைய திருமாலும் தம்மால் இயன்ற அளவும் தேடித்திரிந்து ஏத்தியும் காண்பதற்கு அரியவனாகிய சிவபிரானது ஊர் (யாதெனில்) நூல்களில் கூறப்பட்ட நற் செய்கைகள் உடையவர்கள் கூடிப் பணிகள் பலவும் செய் கின்ற தேன் பொருந்திய விளக்கமுற்ற சோலைகள் சூழ்ந்த திருநாரையூரேயாகும்.

ஆமளவும் திரிந்து என்பது தமது ஆற்றல் இடங் கொடுத்தவரை முற்றிலும் பிரமதேவன் மேலே அன்ன மாகப் பறந்தும், திருமால் பன்றியாகிக் கீழே இடந்தும் தேடித்திரிந்து என்றதாம்.

பாமருவும் குணம் — 'பா' என்பது பாடலைக் குறித்து இங்கு நூல்களைக் குறித்தது. அற நூல்களில் கூறப்பட்ட நற்குணங்கள் எனக் கொள்க.

**வெற்றரை யாகிய வேடங்காட்டித் திரிவார் துவராடை**
**உற்றரை யோர்க ளுரைக்குஞ்சொல்லை உணரா தெழுமின்கள்**
**குற்றமி லாததோர் கொள்கையெம்மான் குழகன் தொழிலாரப்**
**பெற்றர வாட்டிவரும் பெருமான் திருநாரை யூர்சேரவே. ...10**

10. ஆடையற்ற நிர்வாணக் கோலங்காட்டி திரிவா ராகிய சமணர்களும், காவியுடைகளை உடுத்தவர்களாகிய பௌத்தர்களும் உரைக்கின்ற சொற்களை ஏற்றுக்கொள் ளாது,குற்றமென்பதே இல்லாத கொள்கையினையுடைய எம் பெருமானும், இளமையானவனும், அடியார்க்கருளும் தனது தொழில் நிறைவேறப்பெற்று அரவினை ஆட்டி வருகின்ற வனுமாகிய சிவபிரானாரின் திருநாரையூர் சேர்வதற்குப் புறப்படுங்கள்.

**வெற்றரை** — ஆடையற்ற இடை. ஆடையற்றுத் திரிதலும், காவியுடை உடுத்துத் திரிதலுமே தவம் எனக் கொள்ளும் சமணர்களும் பௌத்தர்களும் கூறும் சொற்களை ஏற்காது திருநாரையூர் சென்று சிவபிரானை வழிபடப் புறப்படுங்கள் என்று உபதேசித்ததாம்.

**தொழில்** — இறைவரது ஐந்தொழிலுள் இங்கு அருள் கொள்ளப்பட்டது.

**அரவாட்டி வரும் பெருமான்** — சிவபெருமான் பாம்பை ஆட்டிவருந்தன்மை தன் அடியார் அஞ்சத்தக்க வினைகளைப் போக்குபவன் தானே என அறிவித்தற்கு என்பது திருத் தருமையாதீனக் குறிப்புரை.

**பாடிய லுந்திரை சூழ்புகலித் திருஞான சம்பந்தன்**
**சேடிய லும்புக ழோங்குசெம்மைத் திருநாரை யூரான்மேல்**
**பாடிய தண்டமிழ் மாலைபத்தும் பரவித் திரிந்தாக**
**வாடிய சிந்தையி னார்க்குநீங்கு மவலக் கடல்தானே. ...11**

திருச்சிற்றம்பலம்

*11.* ஓசையுடைய கடல் சூழ்ந்த சீகாழியில் தோன்றிய திருஞானசம்பந்தன் பெருமை பொருந்தியதும் ஓங்கும் புகழ் உடையதும், செம்மைத் தன்மையுடையதுமான திருநாரையூரில் கோயில் கொண்ட பெருமானின் மீது பாடிய குளிர்ச்சி பொருந்திய தமிழ்மாலையாகிய இப்பத்துப் பாடல்களையும் பாடித் துதித்தவர்களாகக் கொண்டாடிய சிந்தை உடையோர்களுக்கு அவலக்கடல் நீங்கும் என்பதாம்.

**பாடு** — ஓசை; **சேடு** — பெருமை

**செம்மைத் திருநாரையூர்** — செம்மைப் பொருளாகிய சிவம் கோயில் கொண்டுள்ள திருநாரையூர்.

தண்டமிழ் — துன்பமாகிய வெப்பத்துக்கு அருளாகிய குளிர்ச்சியைத்தரும் தமிழ். இனிமையான தமிழ் என்றலு மாம்.

ஆடிய சிந்தை — கொண்டாடும் மனம்.

வாடிய சிந்தையினர் எனக் கொண்டால் மனம் வாட்ட முற்றவர்க்குத் துன்பம் நீங்கும் என்று கூறியதாகக் கொள்க. அவலம் — துன்பம்.

பாடுவாரது துன்பங்கள் நீங்குவது இப்பதிகப் பலனும் எனக் கொள்க.

சிவம்

---

மறுத்தார் சிவிகை பரித்தார்!

''அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடையை''—மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்று
உந்துஞ் சிவிகையினை யூர்ந்து.

—நால்வர் நான்மணிமாலை:33

திருஞானசம்பந்தப் பெருமானது சிவிகையினைத் தாங்கப் பெற்றவர் செலுத்துஞ் சிவிகையை நடத்தி (சிறந்த தேவராய்) திரிகுவராதலின், அறத்தின் பயன் இது என்று யாம் ஆகம அளவையால் உணர்த்த வேண்டுவதில்லை, சிவிகையைத் தாங்குவானோடு ஊர்ந்தவனிடைக் காட்சி யளவையாலே உணரப்படும் (என்ற பொருளமைந்த திருக் குறள் வாய்மையினை) மறுத்தவராயினர்.

திருஞானசம்பந்தருடைய சிவிகையினைத் தாங்குபவர் மிகுந்த புண்ணியமுடையவராய்த் தம்மைத் தாங்கும் தெய்வச் சிவிகை ஊர்பவராய்த் திரிகுவராதலால் இப் பாடலிற் குறிப்பிட்ட திருக்குறளை மறுத்தவராயினர் என்பது கருத்து. உவகையும், பக்தியும் மேம்பட திருநாவுக் கரசரும் ஒரு சமயம் பொறுத்த சிவிகையைப் பொறுப்பவர் மிக்க புண்ணியரேயாவர் அல்லவா ?

---

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருநாரையூர்-3

**பதிக வரலாறு :** திருநாரையூர்த் தலத்தில் மேவு நாட்களில் பாடியருளிய திருப்பதிகம் இது. பதிகப் பாடல் தோறும் பாவங்களும் அவை காரணமாக வரும் துன்பங்களும் நீங்கும் எனப் பயன்களை உறுதிபடக் கூறியருளியது இப்பதிகத்துக்குரிய தனிச் சிறப்பாகும். இக்காரணம் பற்றியே இதனை அருந்தமிழ் எனச் சேக்கிழார் போற்றியருளினர் போலும். 'அப்பதி பணிந்தருந் தமிழ்புனைந்து தம் மெய்ப்படு விருப்பொடு மேவு நாள்' என்பது தெய்வப் புலவரின் திருவாக்கு.

பண்–பியந்தைக்காந்தாரம்] [2-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

உரையினில்வந்தபாவம் உணர்நோய்களும்ம
செயல்தீங்கு குற்றமுலகில்
வரையினிலாமைசெய்த அவைதீரும்வண்ணம்
மிகவேத்தி நித்தநினைமின்
வரைசிலையாகஅன்று மதில்மூன்றெரித்து
வளர்கங்குல் நங்கைவெருவத்
திரையொலிநஞ்சமுண்ட சிவன்மேயசெல்வத்
திருநாரை யூர்கைதொழவே. ...1

பதிகப் பொழிப்புரை:

*1.* உங்களுடைய வாக்கினால் வந்த தீவினைகளும், மனத்தால் உண்டான தீவினைகளும், தீயசெயல்களால் வந்த தீவினைகளும், ஆகிய அளவில்லாது செய்த குற்றங்களானவை அன்று மலையினை வில்லாகக் கொண்டு மூன்று மதில்களையும்

எரித்து, உமா தேவியார் அஞ்சும்படி கடலில் தோன்றிய விடத்தினையுண்ட சிவபெருமான் எழுந்தருளிய செல்வத் திருநாரையூர் கைதொழுதால் நீங்கும். எனவே அப் பெருமையினைத் துதித்து நித்தம் நினையுங்கள்.

சிவன் மேய செல்வத் திருநாரையூர் கைதொழுது சிவ பெருமானை நித்தம் ஏத்தி நினைவார்க்கு பாவங்கள் நீங்கும் என்பதாம்.

உரையினில் வந்த பாவம்—வாக்கினால் வந்த பாவங்கள் இவை பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் எனப் படும்.

உணர் நோய்கள்— உணர்தற்குரிய கருவியான மனத் தின் நினைப்பால் வந்த பாவங்கள். தீயன செய்ய நினைத் தலே பாவமாம் என்க.

செயல் தீங்கு குற்றம்—தீங்கு செயல் குற்றம் என மாற்றித் தியசெயல்களால் வந்த குற்றங்கள் எனக் கொள்க.

செயலது தீங்காலாகும் குற்றம் என விரித்தலும் ஆம் என்பது திருத்தருமபுர உரைக் குறிப்பு.

உரை, உணர், செயல் ஆகிய மூன்றும் முறையே வாக்கு, மனம், காயம் (உடல்) என்ற மூன்றையும் குறித்து அவற்றால் உண்டாகும் பாவங்களைக் கூறித்தபடியாம். உரை யினால் வந்த குற்றத்தைப் பாவம் என்றும், மனத்தினால் வந்த குற்றத்தை நோய் என்றும், உடலால் செய்த தீங்கினை குற்றம் என்றேயும் கூறியருளினார். மனிதன் குற்றம் புரிவதற்குரிய கருவிகள் இம்மூன்றேயாம்.

வரையினிலாமை--வரையில் நிலாமை அதாவது அளவில் நில்லாமை. அளவு கடந்து என்றபடி.

அவை— பாவம், நோய், குற்றம் ஆகியவை.

**ஊனடைகின்றகுற்ற முதலாகியுற்ற**
**பிணிநோயொருங்கும் உயரும்**
**வானடைகின்றவெள்ளை மதிசூடுசென்னி**
**விதியானவேத விகிர்தன்**
**கானிடையாடிபூதப் படையானியங்கு**
**விடையானிலங்கு முடிமேல்**
**தேனடைவண்டுபாடு சடையண்ணல்நண்ணு**
**திருநாரை யூர்கைதொழவே. ...2.**

உ. உயர்ந்த வானத்தில் உள்ள வெண்மையான சந்திரனைச்சூடுகின்ற தலையினையுடைய தலைவரான வேதவிகிர்தரும், கானகத்திலே ஆடுபவரும், பூதப்படையினையுடையவரும், இயங்குகின்ற இடபத்தை வாகனமாக உடையவரும் விளக்கத்துடன் கூடிய திருமுடியின் மேல் தேனை விரும்பிச் சேர்கின்ற வண்டுகள் பாடுகின்ற சடையினையுடைய அண்ணலுமான சிவபிரான் விரும்பிய திருநாரையூர் கைதொழுதலால் இப்பிறவியை அடைகின்ற குற்றம் முதலான பிணிகள், நோய்கள் யாவும் ஒருங்கே கெடும்.

**விதி**—விதிப்பவர், தலைவர் என்ற பொருளில் வந்தது.

**கானிடையாடி**— கானகத்திலே ஆடுபவர், (பெயர்ச்சொல்லாக வந்தது).

**வண்டு பாடும் சடை**—சடையின் மேலுள்ள கொன்றை மலரில் உள்ள தேனை விரும்பியடையும் வண்டுகள் பாடும் என்பதாம்.

**ஊன்**—தசை, அதனையுடைய உடம்பிற்காகி, அவ்வுடம்பு எடுக்கக் காரணமான பிறவியினைக் குறித்தது.

**குற்றம், பிணி, நோய்** — முன்பாடலிற் கூறிய இம்மூன்றினையுமே இப் பாடலிலும் கூறியருளினார். இவற்றின் தொகுப்பே பிறவிக்குக் காரணமாகிய வினைத்தொகையாதலால் என்க.

ஒருங்கும்—கெடும்; அறவே ஒழியும் என்பதாம். திருநாரையூர் கைதொழ இம்மூன்றும் கெடும். கெடவே பிறப்பிலராவர் என்பது கருத்து.

ஊரிடைநின்றுவாழும் உயிர்செற்றகாலன்
துயருற்ற தீங்குவிரவிப்
பாரிடைமெள்ளவந்து பழியுற்றவார்த்தை
ஒழிவுற்ற வண்ணமகலும்
போரிடையன்றுமூன்று மதிலெய்தஞான்று
புகழ்வானுளோர்கள் புணரும்
தேரிடைநின்றஎந்தை பெருமானிருந்த
திருநாரை யூர்கைதொழவே. .. 3

3. உடம்பினுள் நின்று வாழுகின்ற உயிரைச் செறும் தொழிலையுடைய இயமன் (ஒருசமயம்) துயருற்ற தீங்கு சேர்ந்தமையால் நிலவுலகத்திடை மெள்ள வந்து (சிவபிரானை வழிபட) அவன் மீது உற்ற பழியான சொற்கள் ஒழிவுற்றது போல, போரின் இடையில் மும்மதில்களையும் (எரியும்படி. கணை) எய்த நாளன்று புகழ்தலையுடைய வானுலகத்தவர்கள் கூடிய தேரிலே ஏறி நின்ற எந்தை பெருமானாகிய சிவபிரான் வீற்றிருந்த திருநாரையூர் கைதொழுதலால் (தொழுவாரது குற்றம், நோய், தீங்கு ஆகிய இவை மூன்றும்) அகலும்.

முன்னிரு பாடல்களில் கூறிய மூன்றையே இப்பாடலில் அகலும் என்ற வினைமுற்றுக்கு எழுவாயாகக் கூறினர் எனக் கொள்க.

இயமன் மீது உற்ற தீங்கு விரவிய பழி வார்த்தைகள் சிவபிரானை வழிபட ஒழிவுற்றது போலவே, திருநாரையூர் கைதொழுவாரது மூவகையான குற்றமும் அகலும் என்பது கருத்து.

திருமால், பிரமன், இந்திரன், தேவகுரு போன்ற வானுலகர் அனைவரும் மண்மேல் வந்து அரனையருச்சித்துத் தமக்கு

ஏற்பட்ட தீங்குகளினின்றும் நீங்கியது போலவே இயமனும் வழிபட்டுத் தீங்கு விரவிய பழி வார்த்தைகளின்றும் நீங்கியிருத்தல் வேண்டும். இவ்வரலாறு திருநாரையூருடன் தொடர்புடையதா அன்றிப் பொதுவானதா என்று புலப்படவில்லை. அல்லது மார்க்கண்டேயர் வரலாற்றுடன் தொடர்புடையதா என்பதை மேலும் ஆய்ந்து இவ்வரலாறு பற்றிய குறிப்புகள் கிடைப்பின் பின்னர் தக்கசமயத்தில் வெளியிடப்படும். திருநாரையூர்த் தலபுராணத்தில் இது பற்றி ஏதும் குறிப்பில்லை என அறிகிறோம்).

**ஊரிடை நின்று வாழும் உயிர்**—உயிர் நின்று வாழ்தற்குரிய இடம் உடம்பேயாகலின் இங்கு **ஊர்** என்ற சொல்லுக்கு **உடம்பு** எனப் பொருள் கொள்ளப்பட்டது.

**மதிலெய்த ஞான்று**— ஞான்று என்பது நாளன்று என்பதன் மரூஉ. அந்நாள், அப்பொழுது என்னும் பொருளில் ஆளப்படும் சொல்.

**தீயுறவாயஆக்கை அதுபற்றிவாழும்**
**வினைசெற்ற வுற்றஉலகின்**
**தாயுறுதன்மையாய தலைவன்தன்நாமம்**
**நிலையாகநின்று மருவும்**
**பேயுறவாயகானில் நடமாடிகோல**
**விடமுண்டகண்டன் முடிமேல்**
**தேய்பிறைவைத்துகந்த சிவன்மேயசெல்வத்**
**திருநாரை யூர்கைதொழவே.** ...4

4. பேய்களின் உறவாகிய கானகத்தில் நடனமாடுபவனும், விடத்தினையுண்டு அதனால் அழகான நீலகண்டத்தினையுடையவனும், முடியின் மீது தேய்ந்த பிறைச் சந்திரனை வைத்து உயர்ந்தவனாகிய சிவபிரான் எழுந்தருளிய செல்வத் திருநாரையூர் கைதொழுதலால், தீவினைகளோடு உறவாகிய இந்த உடம்பும், அவ்வுடம்பினை ஆதாரமாகக்

கொண்ட வினைகளும் நெருங்கிய இந்த உலகிற்கு உற்ற தாயாகும் நன்மையனான தலைவனாகிய சிவபிரானது திரு நாமம் என்றும் நிலையாக நின்று பொருந்தியிருக்கும்.

**வினை செற்ற உலகு** என்றும் **உலகின் உற்ற தாயுறு தன்மையாய** என்றும் இணைத்துக் கொள்க.

இறைவனே இவ்வுலகுக்கு தாயாவர், தந்தையுமாவர். "தாயாய் முலையைத் தருவானே" என்ற திருவாசகம் காண்க. (ஆனந்த மாலை-5) "எவ்வுயிர்க்குந் தாயானானை" என்பார் சேக்கிழார் பெருமான். (சடையானை எனத் தொடங்கும் திருஞான சம்பந்தர் புராணம் 482-வது திருப் பாடல்.)

**பேயுறவாயகான்**—பேய்கள் கானகத்தில் நெருங்கி வசித் தலால் பேய்கட்கு உறவாகிய கானம் எனக் கூறினார். பேய் களின் உறைவிடம் என்பது பொருள்.

**தேய்பிறை**—தட்சன் சாபத்தால் தேய்ந்த பிறை. அதனைத் தலையில் வைத்துக் காத்தமையால் சிவபிரான் உயர்ந்தவராயினார்.

செல்வத்திருநாரையூர் கைதொழத் தலைவனது திரு நாமம் நிலையாக நின்று நாவினில் மறவாது என்றும் பொருந்தியிருக்கும் என்பதாம்.

**வசையபராதமாய வுவரோதம்நீங்கும்**
**தவமாயதன்மை வரும்வான்**
**மிசையவராதியாய திருமார்பிலங்கு**
**விரிநூலர் விண்ணும்நிலனும்**
**இசையவராசிசொல்ல இமையோர்களேத்தி**
**அமையாதகாத லொடுசேர்**
**திசையவர் போற்றநின்ற சிவன்மேயசெல்வத்**
**திருநாரை யூர்கைதொழவே. ...5**

5. வானுலகத்தோர்க்கெல்லாம் ஆதி முதல்வனாகிய, அழகிய மார்பினில் இலங்குகின்ற பூணூலையுடையவரும், விண்ணுலகிலும் நிலவுலகிலும் உள்ளவர்கள் வாழ்த்து மொழிகளைக் கூற, இமையோர்கள் துதித்துக் கொண்டு அடங்காத காதலோடு சென்று சேர்கின்ற, எல்லாத் திசைகளிலுமுள்ளவர்கள் போற்றும்படியாக நிலை பெற்று நின்ற, சிவபெருமான் விரும்பி எழுந்தருளிய திருநாரையூர் கை தொழுதலால் வசைகளும் அபராதங்களுமாகிய இடையூறுகள் நீங்கும். தவமாகிய தன்மை வந்து சேரும்.

வசை—பழி; அபராதம்—குற்றம்:

உவரோதம்—இடையூறு, தடை எனப் பொருள்படும் வடமொழிச் சொல்லாகிய உபரோத: என்பது உவரோதம் எனத் தமிழில் வந்தது.

தவமாயதன்மை வரும் — "தவமும் தவமுடையார்க்காகும்" என்ற செந்தமிழ்ப் பொதுமறை வாக்குப்படி தவஞ் செய்தற்குரிய தகுதி வந்து சேரும் என்பதாம்.

வான்மிசையவர் ஆதி — வானுலகத்தோர்க்கெல்லாம் முதல்வனாகிய பிரான்.

விரிநூலர்—திருமார்பிலங்கு என்ற விசேடணத்தால் பூணூல் எனக்கொள்ளப்பட்டது.

விண்ணும் நிலனும் இசையவர்—விண்ணுலகத்தும் நிலவுலகத்தும் பொருந்தியவர். புகழுடன் கூடியவர் என்று கொள்ளலுமாம். இசை—புகழ்.

ஆசி சொல்ல—வாழ்த்து சொல்ல, திருப்பல்லாண்டு என்ற சேந்தனார் அருளிச் செயல் காண்க.

அமையாத காதல்—எவ்வளவு பாடித் துதித்தாலும் அடங்காத பெருங்காதல்.

திசையவர்—நான்கு திசைகளிலும் உள்ளவர்கள். உலக மக்கள் அனைவரும் என்று கொள்க.

மக்கள் தவநெறியில் முயல்வதற்குத் தடையாகவுள்ள வசைகளும் அபராதங்களும் சிவபிரான் மேய திருநாரையூர் கைதொழுதலால் நீங்கித் தவமாய தன்மை வரும் என்று அருளிச் செய்தமை கண்டு கொள்க.

உறைவளருன்நிலாய உயிர்நிற்கும்வண்ணம்
    உணர்வாக்கும் உள்ளமைஉலகில்
குறைவுளவாகிநின்ற குறைதீர்க்குநெஞ்சில்
    நிறைவாற்று நேசம்வளரும்
மறைவளர்நாவன்மாவின் உரிபோர்த்தமெய்யன்
    அரவார்த்த அண்ணல்கழலே
திறைவளர்தேவர்தொண்டின் அருள்பேணநின்ற
    திருநாரை யூர்கைதொழவே. ...6

6. வேதம் வளரும் திருநாவினையுடையவனும், யானையின் தோலைப் போர்த்திய திருமேனியனும், பாம்பினைக் கச்சாகக் கட்டிய தலைவனுமான சிவபிரானுடைய திருவடிகளையே நிரம்பிய காணிக்கைகளுடன் தேவர்கள் செய்த தமது தொண்டினால் எய்திய திருவருளை விரும்பி நின்ற திருநாரையூர் கைதொழுதலால், உறையாக வளருகின்ற உடம்பினுள் நிலவிய உயிர் நிற்கின்ற வண்ணமாகிய உண்மை உணர்வினை உண்டாக்கும். குறைவுகளால் இவ்வுலகில் ஏற்படும் குறையினைத் தீர்க்கும். நெஞ்சில் நிறைவினை உண்டாக்கும். அன்பு வளரும் (எனவே திருநாரையூர் தொழுங்கள் என அறிவுறுத்தியபடி கண்டு கொள்க.)

உறைவளர் ஊன் நிலாய உயிர்—உறைவிடமாக வளருகின்ற உடம்பினுள் நிலவிய உயிர்.

ஊன்—தசை, இங்கு உடம்பினைக் குறித்தது. உயிர் நிற்கும் வண்ணம்—உடம்பினுள் உயிர் நிற்கின்ற தன்மை அதாவது 'உடம்போடு உயிரிடை நட்பு' எனக் கொள்க.

நிற்கும் வண்ணம்—இதற்குச் 'சிவனடியில் நிலை பெற்று நிற்கும்படி.' எனத் தமது குறிப்புரையில் கூறினர் பெரிய புராணப் பேருரை ஆசிரியர் திரு. சிவக்கவிமணியவர்கள்.

**உணர்வு ஆக்கும் உண்மை**—உண்மை உணர்வு ஆக்கும் என மாற்றிப் பொருள் கொள்க. உண்மை அறிவினை அதாவது மெய்ஞ்ஞானத்தினை உண்டாக்கும் என்பதாம்.

**குறை தீர்க்கும்**-யாம் குறைவு உடையோம் என்ற மனக் குறைகளைத் தீர்க்கும்.

**நெஞ்சில் நிறைவு ஆற்றும்**— குறைகள் தீர்தலால் நெஞ்சம் நிறைவு அடையும் என்பதாம்.

**நேசம்**—அன்பு, இதனை உயிர்களிடத்தும், இறைவனிடத்தும் முறையே கருணையாகவும், பக்தியாகவும் கொள்க.

**மாவின் உரி**—யானையின் உரித்த தோல்

**திறைவளர் தேவர்**—காணிக்கைகள் நிரம்பிய தேவர்கள் காணிக்கை ஈண்டு பூசைக்குரிய பொருள்களைக் குறிக்கும்.

திறைவளர் தேவர் என்பதற்குச் சிவபெருமானுக்குத் திறையாக (அடைக்கலமாக) வளரும் தேவர்கள் என்பது திருத்தருமபுர ஆதீன உரைக் குறிப்பின் கருத்து.

**அருள் பேண நின்ற**—அருளை விரும்பி நின்ற.

காணிக்கை பொருட்களுடன் தேவர்கள் தொண்டு செய்து திருவருளை விரும்பி நின்ற திருநாரையூர் கைதொழுதலால் ஞானம் உண்டாகும். குறைவுகள் நீங்கி நெஞ்சில் நிறைவு ஏற்படும். உயிர்களிடத்தும் இறைவனிடத்தும் அன்பு பெருகும் என்பதாம்.

**தனம்வரும்நன்மையாகுந் தகுதிக்குழந்து**
**வருதிக்குழன்ற உடலின்**
**இனம்வளரைவர்செய்யும் வினயங்கள்செற்று**
**நினைவொன்று சிந்தைபெருகும்**

முனமொருகாலம்மூன்று புரம்வெந்துமங்கச்
சரமுன்றெறிந்த அவுணர்
சினமொருகாலழித்த சிவன்மேயசெல்வத்
திருநாரை யூர்கைதொழவே. ...7

7. முன்னொரு காலத்தில் மூன்று புரங்களும் வெந்து அழியும்படி எய்த அம்பின் முன் எரிந்த அவ்வசுரர்களது சினத்தினை ஒரே சமயத்திலழித்த சிவபிரான் மேவிய செல்வத் திருநாரையூர் கைதொழுதலால் செல்வம் வரும். நல்லன வெல்லாம் உண்டாகும். நல்ல தகுதியினைப் பெறுவதற்காக வருந்தி எல்லாத் திசைகளிலும் அலைகின்ற இந்த உடம்பில் பொருந்திய ஐம்புலன்களால் ஏற்படுகின்ற வஞ்சகங்கள் ஒழிந்து சிவபிரானது திருவடிக்கே நினைவினைப் பதித்த சிந்தை பெருகும்.

ஐம்புலன்களின் மயக்கத்துக்கு உட்படுவதால் நாம் மேன்மை பெறுவதில்லை. திருநாரையூர் கைதொழுதால் ஐம்புலச் செய்கைகளை நீக்கிச் சிவபிரானது திருவடிக்கே பதித்த நினைவுடன் கூடிய சிந்தை பெருகும். அதனால் மேன்மை உண்டாகும். மற்றும் செல்வமும் நன்மைகளும் உண்டாகும் என்பதாம்.

**ஐவர் – ஐம்புலன்கள், வினயங்கள்**—மயக்கம் அல்லது வஞ்சகம் எனவும் கொள்ளலாம்.

**நினைவு ஒன்று சிந்தை**—நினைவு ஒன்றுகின்ற (பதிகின்ற) மனம்.

**ஒரு காலழித்த**— ஒரே காலத்தில் அழித்த; 'ஏ' காரம் தொக்கது எனக் கொள்க.

உருவரைகின்றநாளில் உயிர்கொள்ளுங்கூற்றம்
நனியஞ்சுமாத லுறநீர்
மருமலர்தூவியென்றும் வழிபாடுசெய்ம்மின்
அழிபாடிலாத கடலின்

அருவரைசூழிலங்கை அரையன்றன்வீரம்
அழியத் தடக்கைமுடிகள்
திருவிரல்வைத்துகந்த சிவன்மேயசெல்வத்
திருநாரை யூர்கைதொழவே. ...8

8. உடம்பினின்றும் உயிர் நீங்கும் காலத்தில் அவ்வுயிரைக் கவர்ந்து கொள்ளும் கூற்றுவன் (கவராது) அஞ்சு தலையடைய வேண்டுமானால், நீங்கள் என்றும் அழிதலில்லாத கடலில் மலைகள் சூழப் பெற்ற இலங்கை மன்னனாகிய இராவணனது வீரம் அழியும்படி அவனது பத்துத் தலைகளும் இருபது கைகளும் நசுங்க ஒரு திரு விரலை ஊன்றி உயர்ந்த சிவபெருமான் எழுந்தருளிய செல்வத் திருநாரையூர் கை தொழுது மணமுள்ள மலர்களைத் தூவி எக்காலத்தும் வழிபாடு செய்யுங்கள்.

உருவரைகின்ற நாள்— உடலும் உயிரும் சேர்ந்து ஒரு உருவாக நிற்பதற்கு கால அளவு விதிக்கப்பட்ட நாள்.

சிவபக்தர்களின் உயிரைக் கவர இயமன் அஞ்சுவன் எனவே அவ்வாறு அவன் அஞ்சு தலையடைய நீங்கள் சிவ பக்தர்களாக ஆவதற்குத் திருநாரையூரில் பெருமானை மண முள்ள மலர்களால் அருச்சித்து வழிபடுங்கள் என்று உலகர்க்கு அறிவுறுத்தியருளியது கண்டு கொள்க.

இவ்வாறின்றித் திருநாரையூர் கை தொழுதலால் உயிர் கவர இயமன் அஞ்சுவன். ஆதலால் நீர் என்றும் சிவ வழிபாடு செய்யுங்கள் என்றும் பொருள் உரைத்துக் கொள்ளலாம்.

வேறுயர்வாழ்வுதன்மை வினைதுக்கமிக்க
பகைதீர்க்குமேய உடலில்
தேறியசிந்தைவாய்மை தெளிவிக்கநின்ற
கரவைக் கரந்துதிகழும்

சேறுயர்பூவின்மேய பெருமானுமற்றைத்
திருமாலும் நேடஎரியாச்
சீறியசெம்மையாகுஞ் சிவன்மேயசெல்வத்
திருநாரை யூர்கைதொழவே. ...9

9. சேற்றில் தோன்றும் உயந்த தாமரைப் பூவில் மேவிய பிரமதேவனும் மற்றும் திருமாலும் தேடும்படி எரியுருவாய்ச் சிறிய செம்பொருளாகிய சிவபிரான் மேவிய செல்வத்திருநாரையூர் கைதொழுதலால், துன்பம் மிக்க வாழ்வுக்கு வேறுபட்டதாய உயர்ந்த இன்ப வாழ்வாம் தன்மை உண்டாகும். வினையாகிய துக்கம் மிக்க பகையினைத் தீர்க்கும். உயிருடன் பொருந்திய உடலில் தெளிந்த சிந்தையையும், உண்மையினையும் தெளிவிக்கும் பொருட்டு இதுகாறும் மறைத்து நின்ற தனது திரோதான சக்தியை ஒழித்து அருட்சக்தி திகழும்படி செய்யும்.

பிரம விட்டுணுக்கள் தேடுதற்கரிய எரியுருவாய் நின்ற சிவபிரானது திருநாரையூர் கைதொழுதலால் இன்ப வாழ்வு உண்டாகும், வினைப்பகை தீரும், திருவருட்சக்தி பதியும் என்பது இத்திருப்பாடலின் கருத்தாகக் கொள்க.

**வேறுயர் வாழ்வு** — பிறப்பிறப்புக்கு மாறுபட்டதாய உயர்ந்தி பேரின்ப வாழ்வு—முத்தி நிலை—எனவும் கொள்ளலாம்.

**கரவு**—திரோதான அதாவது இறைவனின் மறைப்பாற்றலைக் குறித்தது.

**கரவைக் கரந்து திகழும்** என்றது அம்மறைப்பாற்றலை மறைத்து அருளாற்றலுடன் திகழும் என்பதாம்.

மிடைபடுதுன்பமின்பம் உளதாக்குமுள்ளம்
வெளியாக்கு முன்னியுணரும்
படையொருகையிலேந்திப் பலிகொள்ளும்வண்ணம்
ஒலிபாடியாடி பெருமை

உடையினைவிட்டுளோரும் உடல்போர்த்துளோரும்
உரைமாயும் வண்ணம்அழியச்
செடிபடவைத்துகந்த சிவன்மேயசெல்வத்
திருநாரை யூர்கைதொழவே. ...10

10. உடையினைத் துறந்த சமணர்களும், உடையினை உடல் மீது நன்கு போர்த்திக் கொள்ளுதலையுடைய பௌத்தர்களுமாகிய இவர்களது சமயக் கொள்கைகள் அழிந்து நசிந்து போகும் வண்ணம் அவற்றில் குணமின்மையை வைத்து உகந்த சிவபிரானது செல்வத் திருநாரையூர் கை தொழுதலால், வாழ்வின் இடையில் ஏற்படுகின்ற துன்பம் மாறி இன்பம் உண்டாகச் செய்யும். உள்ளத்தில் உண்மை ஒளியினை உண்டாக்கும். ஆதலால் ஒரு கையில் சூலப்படையினை ஏந்திப் பிச்சை கொள்ளுகின்ற வண்ணம் ஒலியுடன் பாடி ஆடுபவராகிய சிவனாரது பெருமையினை எப்பொழுதும் மனதால் நினைத்து அறிவினால் உணருங்கள்.

மிடைபடு ............வெளியாக்கும்—இதற்கு வாழ்வின் இடையிலே உண்டாகும் துன்பங்களையே இன்பங்களாகக் கருதுமளவுக்கு உள்ளத்தில் ஞான ஒளியினை உண்டாக்கும் எனக் கூறினும் அமையும். நன்மை தீமைகளை ஒப்பக் காணும் அறிவு வரும் என்பதாம்.

ஒலிபாடியாடி— தாருகவனத்தில் பிச்சை புகும் போது சாமகானத்துடன் பாடி ஆடிய பெருமான்.

செடி—அழுக்கு. இங்குப் பயனின்மை மேல் நின்றது. பௌத்தர், சமணர் உரைமாயக் காரணம் அவற்றில் குணம் இல்லாமையேயாம் என்று கூறியவாறு.

உணரும்—உணருங்கள் என்று பொருள்பட நின்ற முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்றாகக் கொள்க.

எரியொருவண்ணமாய உருவானையெந்தை
பெருமானையுள்கி நினையார்
திரிபுரமன்றுசெற்ற சிவன்மேயசெல்வத்
திருநாரை யூர்கைதொழுவான்
பொருபுனல்சூழ்ந்தகாழி மறைஞானபந்தன்
உரைமாலைபத்து மொழிவார்
திருவளர்செம்மையாகி அருள்பேறுமிக்க
துளதென்பர் செம்மையினரே. ...11

திருச்சிற்றம்பலம்

11. தீயைப் போலும் ஒப்பற்ற அழகியதான உருவினை உடையவனும், எந்தை பெருமானும், நினையாதாராகிய அவுணரது முப்புரத்தினையன்று அழித்தவனுமாகிய சிவபிரான் மேய செல்வத் திருநாரையூரைத் தியானித்துக் கைதொழுவானாகிய, பொருபுனல் சூழ்ந்த சீகாழி மறைக்குலத்து ஞானசம்பந்தன் உரையாகிய பத்து பாடல்களாகிய இத் தமிழ் மாலையை மொழிபவர்கள் வளர்கின்ற திருவினையுடைய செம்மை நிலையுடையராகி, திருவருட்பேறு மிக்கது உள்ளது என்பவர்களாய்ச் செம்மையினர் ஆவார்கள்.

பொருபுனல்— கரையினை மோதுகின்ற புனல். நீரின் மிகுதி குறித்தது.

இத் திருப்பாடலில் வந்துள்ள இரண்டு செம்மைகளில் முதலாவது இம்மையில் வரும் நன்னிலையையும், இரண்டாவது மறுமையில் அடையும் செவ்விதாம் நிலையையும் குறித்ததாகக் கொள்க.

திருநாரையூரானைக் கைதொழுவானாகிய மறைஞான சம்பந்தன் உரைமாலை பத்தும் மொழிபவர் இம்மை மறுமை ஆகிய இருமையிலும் செம்மையினராய் ஆவார்கள் என்பது கருத்து.

சுவாமி—சௌந்தரேச்வரர்] [தேவி—திரிபுரசுந்தரி

சிவம்